ஸ்ரீயப்பதியானவன் ஸ்ரீவைகுண்டத்தில் நித்தியர்முக்தர்களாலே சேவிக்கப்பட்டு ఏష హ్యేవా నందయాతి - என்று அவர்களை ஆனந்திப்பித்துக் கொண்டிருக்கையிலும் அவர்களைப்போல் நித்தியானந்தத்தையடையும்படியான பிராப்தி- லீலாவிபூதியிலுள்ள வர்களுக்கும் ஒத்திருக்கவும் இவர்கள் மூலப்பிரகிர்தியில் லயமாகிக்கிடக்கிறதசையில் ஈசுவரன் கிருபைபிரஸரித்து சுருதி సయేకా కీనరమేత - என்று அந்தநித்திய சூரிகளுடைய கலவியில் இன்பமடையாமல்தனியிருப்பாய் -(பற்றிலனீசனு முற்றவுநின்றனன்) என்கிறபடியே அவர்களிடத்திலிருக்கின்ற பற்றெல்லாம் நித்தியஸம்ஸாரிகளிடத்தில்வைத்து சுருதி బహుస్యాం ప్రజా యాయేతి என்றும் - மனுஸ்மிருதியில் సయేవస్వ యముద్బభౌ என்றுந் தம்முடைய பரமநிர்ஹேதுககிருபையாலே மூலப்பிரகிர்தியில் ஆவேசித்து విచిత్రా దేహసంపత్తిః ఈశ్వరాయ నివేదితుం-పూర్వ మేవకృతా బ్రహ్మన్ - హస్తపాదాది సంయుతా- என்றும் (சிந்தையினோடு கரணங்கள்யாவுஞ்சிதைந்துமுன்னாள் - அந்த முற்றாழ்ந்தது கண்டவையென்றனக்கன்றருளால் தந்தவரங்கள்) என்று

ம் கரசரணாதி அவையவங்களையும். హన్తు ఽంత ము స్పృదసతీచవి వేత్తుమీంశో - మాసం ప్రదీపమివ కారుణికో దదాతి என்கிறபடியே நல்லதுதீயதையறியும்படி திருவிளக்கைப்போலே மோக்ஷசாஸ்திரங்களையும் இவர்கள் பிரார்த்திக்கவன்றிக்கே நிர்ஹேதுக கடாக்ஷத்தாலேகொடுத்தான் - இவ்வர்த்தத்தை ஆழ்வார் திரவிடவேதத்தில் (ஆக்கைகொடுத்தளித்த கோனே குணப்பரனே) என்றும்- (அறியாதன வறிவித்தவத்தா) என்றும் அருளிச்செய்தார் - பட்டர்- అచిదవిశేషితాఽన్ ప్రళయసీమని సంసరతః. కరణకళేబరైర్ఘటయితుం దయమాన మనాః - என்றுபிரளயாரணவத்தில் அசித்தான காஷ்டபாஷணங்களுக்குச் சமானமாய் மூலப்பிரகிர்தியில் வசித்துகக்கொண்டிருந்த ஆத்மாக்களுக்கு ஈசுவரன் தன்னுடைய நிர்ஹேதுககிருபையாலே கரசரணம் முதலான அவயவங்களைக் கொடுத்தானென்றருளிச்செய்தார் - வேதாந்ததேசிகருப்பெரியவாச்சாம்பிள்ளை.திருவடிகளில் ஆசிரயித்தபின்பு - అచిదవిశేషితాఽన్ జంతూన్ నవలోక్య జాతనిర్వేదా కరణకళేబరయోగం వితరసివృషశైలనాథ కరుణే త్వం - என்று அசித்துக்கு விசேஷமில்லாமல் ஆத்மாக்கள் அனர்த்தப்படுவதை திருவேங்கடமுடையான்கண்டுதம்முடைய நிரஹேதுககிருபை

யாலே கரணகளேபரங்களைக் கொடுத்தானென்ற
ருளிச்செய்தார்-வடகலையாரென்ற ஸ்ரீவைஷ்ணவர்
கள் மூலப்பிரகிர்தியில் கரணகளேபரங்களை ஈசு
வரன் தன்னுடைய நிர்ஹேதுககிருபையால்கொ
டுத்தானென்ற விஷயத்தில் ஸம்சயமில்லை - பின்
பு மோக்ஷத்தையடைகிறதற்கு ஸஹேதுகமென்
கிற தங்கள் முயற்சியால் அடையவேணுமென்று
வாதிக்கிறார்கள் - அப்படி தங்கள் முயற்சியால்
மோக்ஷத்தை யடையமாட்டார்களென்றும் நிர்
ஹேதுககிருபையால் மோக்ஷத்தை யடைகிறார்க
ளென்றும் சுருதிசொல்லியிருப்பதை தெரிவிக்கி
றோம்.

கடவல்லி முண்டகோப நிஷத்தில் - నాయమా
త్మా ప్రవచనేన లభ్యో . న మేధయా . న బహునాశ్రు
తేన . என்று ஈசுவரனானவன் சாஸ்தராப்பியாஸத்
தாலே லபிக்கப்பட்டவனல்லன் மேதையென்றகரு
டகியானத்தினாலும் வெகுசுருதமென்ற வேதத்தா
லும் லபிக்கப்பட்டவனல்லன் - என்று ஸ்வய
த்தனத்தால் மோக்ஷமடைகிறோ மென்றவர்க
ளுக்கு ஒருநாளும் மோக்ஷங்கிடையாதென்று சு
ருதிசொல்லிற்று - యమేవైష వృణుతే తేన లభ్య -
స్తస్యైష ఆత్మా వివృణుతే తనూం స్వాం - என்றுஇ
ந்தஸர்வேசுவரன் எவனைவரிக்கிறனோ அவனா
லேலபிக்கப்பட்டவன் - இந்தஸர்வேசுவரன்எவனை

வரிக்கிருனே அவனுக்கு స్వాం - ஸ்வகீயையான தன்னதான - తనూం - திருமேனியை - వివృణుతే

கொடுக்கிருனென்று-சொல்லுகையால்தென்ஞசாரியர்களே பரமபதத்தையடைகிருர்களென்றுசுருதிசொல்லிற்று - இந்தச்சுருதியைத்திருவாய்மொழியில் இரண்டாம்பத்தில் - நான்காந் திருவாய்மொழியில் இரண்டாம் பாசுரத்துக்கு முப்பத்தாருயிரப்படி வியாக்கியானத்திலும் பின்னுமந்தப்பகவத்விஷயத்தில் அனேகவிடங்களிலு முதஹரித்திருக்கின்றது - பின்னும் ஸ்ரீவசன பூஷணத்தில் - (இவ்வர்த்தத்தை வேதபுருஷன் அபேக்ஷித்தான்) என்றும் அருளிச்செய்தார் - இந்தவாக்கியத்துக்கு மணவாளமாமுனிகள் செய்தவியாக்கியானத்திலும் இந்தச்சுருதயை யுதகரித்திருக்கிருர்.

இந்தச்சுருதியில்- యమేవై షవృణుతే తేనలభ్యః

என்று இந்த ஸர்வேசுவரன் எவனைவரிக்கிருனே அவனுலேலபிக்கப்பட்டவன் - என்று சொன்னபடியே ஆழ்வார் திருவாய்மொழியில் (அறியேன் மற்றருளென்னையாளும்பிரானுர் - வறிதேயருள் செய்வார் செய்வார்கட்குகந்து) என்றுதான் கிருபைசெய்யப்பட்டவர்களுக்குஉகந்துவெறுமனே யருள்செய்வனென்றருளிச்செய்தார் - இதற்குவேதாந்ததேசிகர் பூருவதசையில் (செய்வார்கட்கென்றது) பிரபத்திசெய்யப்பட்டவர்களுக்கென்று அர்த்தம் அருளிச்செய்தார் - அதற்குப் பிள்ளை

லோகாசாரியர் (ஸ்ரீவசனபூஷணத்தில்) அப்போது வரிதே யென்றவிடஞ் சேராதென்று கண்டித்துப் போட்டார் - பின்னும் வாதிகேஸரி அழகியமணவாளஜீயர் செய்தருளிய அஷ்டாதசஸம்வாதம் - என்ற கிரந்தத்தில் இந்தகட்சிக்கு- ప్రియతమఏవహి వరణీయో భవతి - என்று ஈசுவரன் ஆத்மாக்களிடத்தில் பிரியதமத்வத்தினாலே அதாவது அத்யந்தங்கிருபையாலே வரிக்கத்தக்கவனாகிறான் என்று சொல்லுகையால் இந்தச்சுருதிக்குந் தேசிகர் சொன்னது விரோதமென்றருளிச்செய்தார்.

இப்படி சுருதியின்கருத்தையும் இன்னம் அடியில் விவரிக்கிறபுராணங்களின் கருத்தையுந் தெரிவித்தபின்பு அந்தத்தேசிகர்தாமே தென்னாசாரியர்கள் ஸம்பிரதாயத்தில் பிரவேசித்து (சங்கல்பசூரியோதயம்) என்றகிரந்தத்தில்- మిథఃకలహకల్పనా విషమవృత్తి లీలాదయా - పరిగ్రహణకౌతుకః ప్రథితపారవశ్యః ప్రభుః - స్వలక్షితసముద్గమే సుకృతలక్షణే సత్రవిత్ - ఘుణాక్షతిలిపిక్రమాదుపనిపాతినః పాతినః - என்று எம்பெருமானுக்கு லீலையென்றுந்தயை என்றும் இரண்டிஸ்திரிகள் - இவர்களில் தயை என்றவளிடத்தில் பிரசித்தமானபாரவசியத்தையுடைத்தாய் - தம்மால் யாரைரக்ஷிக்கவேணுமென்று லக்ஷியம்பண்ணுகிறானோ அந்த ஆரம்பத்தில் குணாக்ஷதி லிபிக் கிரமத்தில்-அதாவது புழுக்கு

நித்தந்தை எழுத்தாக்குவாரைப்போலே அக்கியான சுகிர்தங்களைக் கல்பித்து தன் சமீபத்தை யடையும் படிபண்ணுகிறவன் என்னையும் ரக்ஷிக்கக்கடவன் என்றருளிச்செய்தார் - இப்படி கீர்வாணவேதத்திலுந் திராவிடவேதத்திலும் அடியில்விவரிக்கிறபுராணங்களிலுஞ்சொன்னவர்த்தங்களைத் தேசிகர்திருவுள்ளம்பற்றி நிர்ஹேதுககிருபையால் ஈசுவரன் ஆத்மாக்களை ரக்ஷிக்கிறானென்று அருளிச்செய்தபடியால் ஸஹேதுகத்தால் அதாவது தங்கள்முயற்சியால் மோக்ஷமடைவர்கள் என்றபக்ஷத்தைதேசிகரும்முன்னமே கண்டித்திருக்கிறார் - முன்சொன்னசுருதியின்கருத்தைப் புராணங்களில் சொல்லியிருப்பதையுந் தெரிவிக்கிறோம்.

ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் - ఏవం సంసృతి చక్రస్థే - భ్రామ్యమాణే స్వకర్మభిః - జీవే దుఃఖాకులే విష్ణోః కృపా కాప్యుపజాయతే - என்றுஇந்தப்பிரகாரம் ஸம்சாரமாகிற சக்கரத்திலே தங்கள் கர்மங்களிலுலே சுழன்றுகொண்டு துக்கங்களிலே வியாகூலப்படுகிற ஜீவனிடத்திலே விஷ்ணுவினுடைய நிர்ஹேதுககடாக்ஷமுண்டாகிறதாய் ஸ்ரீபராசர பகவான் அருளிச்செய்தார்.

மற்றொருபுராணத்தில் - ఈశ్వరస్య చ సౌహార్దం - యదృచ్ఛా సుకృతం తథా . విష్ణోః కటాక్షమద్వేషం , ఆభిముఖ్యం చ సాత్త్వికైః - సంభాషణం షడై

ஜ்ஞாநி - ஹ்யாசார்ய (ஸௌ) ஷ்டிஹேதவ: - என்றுபகவா

னுக்கு ஸௌஹார்த்தகுணமென்றொரு மஹாகு
ணமுண்டு - அதாவது சாஸ்திரபரிசயம்பண்ணுத
துஷ்ட இருதயத்தையுடையவர்கள் விஷயத்தில்
மடிமாங்காயிடுவாரைப்போலும் புழுக்குறித்ததை
எழுத்தாக்குவாரைப்போலும் ஒருவன் பேசும்
போது கிராமத்துக்குந் திவ்வியதேசத்துக்கும்
பகவன்னாமத்துக்கும் மனுஷியன்பேருக்குந் தா
ரதம்மியமறியாமல் சொன்னதுபோலொத்தது
களைப் பிடித்து என்னூரைச்சொன்னாய் - என்
பேரைச்சொன்னாய் - என்னடியார்க் கொதுங்
க நிழல்கொடுத்தாய் அவர்கள் விடாயைத் தீர்த்
தாய் என்றுமாப்போலே சிலவற்றை யேறிடுகிற
குணங்கள்அந்தக்குணத்தினாலே யாதுருச்சிகம் பி
ராஸங்கிகம் - ஆனுஷங்கிகம் என்ற அக்கியான சு
கிர்தங்களைக்கல்பித்து - பொன் வர்த்தகன் பொன்
னையுரைகல்லிலே யுரைத்துமெழுகாலே திரட்டி
ஆபரணமாக்குமாப்போலே அனேகம் ஜன்மங்க
ளில் முன்சொன்னபடியேகற்பித்து ஒரு ஜன்மத்
தில் ஜாயமானகடாக்ஷமென்று ஒருகடாக்ஷஞ்செ
ய்து - அத்தாலே அத்வேஷத்தையுண்டாக்கி - அ
தாவது பகவத்பாகவதவிஷயமென்றால்துவே ஷி
யாதகுணம் - அதற்குப்பின்பு ஆபிமுக்கியத்தை
யுண்டாக்கி - அதாவதுபகவானை யாசிரயிக்கையில்
இச்சை - அதற்குப்பின்பு ஸாத்வீகாளுடைய ஸம்
பாஷணத்தையுமுண்டாக்கி - அதற்குப்பின்பு ஆ
சாரியப்ராப்தியையுமுண்டாக்குகிறானென்றதே

விவாகஞ்சொல்லுகையால் வேதவிரோதிங்களாய்
வாதிக்குமவர்கள் அந்தஜாயமானகடாக்ஷம் பெரு
தவர்களென்று அறிந்துகொள்ளலாம்.

மார்க்கண்டேயபுராணத்தில் - జాయమానం హి పురుషం - యం పశ్యేన్మధుసూదనః - సాత్త్వికస్స తు విజ్ఞేయ - స్స వై మోక్షార్థ చింతకః - என்றுபிறக்கப்பட்டசிசுவை எந்தமதுசூதனனாலேபார்க்கப்படுகின்றதோ அந்தச்சிசு ஸாத்வீககுணத்தையுந் நல்லவிசேஷ கியானத்தையும் மோக்ஷத்திலிச்சையும் உடைத்தாயிருக்கின்றதென்று மார்க்கண்டேயர் சொன்னார்.

காருடபுராணத்தில் ஸ்ரீரங்கமாஹாத்மியத்தில் அசுவத்ததீர்த்தபிரபாவத்தில் - నిర్హేతుకకటాక్షేణ - మదీయేన మహామతే - ఆచార్యవిషయీకారా త్ - ప్రాప్నువంతి పరాంగతిం - என்று என்னுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தினாலே ஆசாரியவிஷீகாரத்தை யடையும்படிபண்ணுகிறேன் - என்று பகவானுஞ் சொன்னபடியே ஆழ்வாரும் - திராவிடவேதத்தில் மயர்வறமதிநல மருளினன் என்றும் - நடுவே வந்துய்யக்கொள்கின்ற நாதன் என்றும் யானொட்டி யென்னுள்ளிருத்துவமென்றிலன் தானொட்டிவந்தென் றனிநெஞ்சை வஞ்சித்தூனொட்டி நின்றென்னுயிரிற் கலந்தியல் வானொட்டுமோ யினியென்னை நெகிழ்க்கவே என்றும் - கண்டாயேநெஞ்சே கருமங்கள்வாய்க்கி

ன்றோர் - எண்டானுமின்றியேவந்தியலுமா-றுண்டானையுலகேழுமோர்மூவடி-கொண்டானைக்கண்டு ணைநீயுமே என்றும் - மாறிமாறிப்பல்பிறப்பும் பிறந்தடியையடைந்துள்ளந்தேறி-யீறிலின்பத்திருவெள்ளம்யானமூழ்கினனென்றும்-ஆவாரார்துணையென்றலை நீர்க்கடலுளழுந்தும் நாவாய்போலப் பிறவிக்கடலுள்நின்று நான்றுளங்க தேவர்கோலத்தொடுந்திருச்சக்கரஞ்சங்கினோடும் ஆவாவென்றருள் செய்தடியேனொடுமானானே - என்றும் - இசைவித்தென்னையுன்றாளிணைக்கீழிருத்துமம்மானே - என்றும் - உணர்விலும்பரொருவனை யவனதருளாலுறப் பொருட்டென - துணர்வினுள்ளே யிருத்தினேனதுவுமவனதின்னருளே - என்றும் - இன்றென்னைப்பொருளாக்கித் தன்னையென்னுள்வைத்தான் அன்றென்னைப் புறம்போக்கப்புணர்த்ததென்செய்வான்-குன்றென்னத்திகழ் மாடங்கள்சூழுந்திருப்பேரான - ஒன்றெனக்கருள்செய்யவுணர்த்தலுற்றேனே - என்றும்இப்படி முதல்திருவாய்மொழிதொடங்கிக்கடைசிவரைக்கும்ஈசுவரன் தன்னுடைய நிர்ஹேதுககடாக்ஷத்தாலே தம்மைரக்ஷித்தானென்று அருளிச்செய்து இன்றைக்கு என்னை ஒருபொருளாக்கின நீ அன்றென்னைப்புறம்பாக்கினது என்னகாரணம் - என்றுகேழ்க்க-அதற்கு ஈசுவரன்மறுமொழியில்லாமல் (அமந்திரோத்ஸவகோஷிப்போலே) ஆழ்வாரே அதுகிடக்கட்டும் - உமக்குநாங்கொடுக்கப்போகிற பரமபதத்தையும் அதற்குப்போகிறஅர்ச்சராதிமார்க்கத்தை

யும் பார்க்கவில்லையோவென்றுசூழ விசும்பணிமு
கில் என்ற கடைசிதிருவாய்மொழியில் அர்ச்சராதி
மார்க்கத்தைக்காட்டினுன் - அமந்திரோத்ஸவகோ
ஷமாவது கலியாணத்தில் புரோஹிதனுக்கு மந்தி
ரந்தோன்றுவிடில் மேளவாத்தியம்பண்ணச்சொ
ல்லுகை(புந்தியிற்புகுந்து தன்பால் ஆதரம்பெரு
கவைத்தவழகன்)என்று தொண்டரடிப்பொடியா
ழ்வார் - இப்படி சிருஷ்டியினுதியிலும்பின்புஆத்
மாபஹாரிகளாய்சம்ஸாரத்தில் வர்த்திக்கிற காலத்
திலும் ஈசுவரன் தன்னுடைய நிரஹேதுககடாக்ஷ
த்தினுலே ரக்ஷிக்கிறுனென்று நினையாதவர்கள் நீ
சரென்று திருமங்கையாழ்வார் - (மறங்கிளர்ந்த
பெருங்கடல்நீருறைந்து றைந்துபரந்தேறிமீண்ட
தப்பால் - புறங்கிளர்ந்தகாலத்துப் பொன்னுலகு
மேழினையுமூழில்வாங்கி - அறங்கிளர்ந்த திருவயிற்
றிலகம்படியில்வைத்தெம்மை யுய்யக்கொண்ட -
நிறங்கிளர்ந்த கருஞ்சோதிநெடுந்தகையை நினையா
தார் நீசர்தாமே) என்றருளிச்செய்தார் - இதனுல்ந
மேவெவந்துய்யக்கொண்டானென்றுஅர்த்தமாமோ
வென்னில் - ஆம் - எப்படி என்னில் - முன்சொ
ன்ன சுருதிபுராணங்களின்படியாலும் ஆழ்வார் ந
மேவெவந்துய்யக்கொள்கின்ற நாதன் என்றருளிச்
செய்தபடியாலும் அவ்வர்த்தத்தையேயிவர் எம்
மையுய்யக்கொண்ட நிறங்கிளர்ந்த கருஞ்சோதி)
என்றருளிச்செய்தபடியால்நிர்ஹேதுக கடாக்ஷத்
தால் ஈசுவரன்ரக்ஷிக்கிறுனென்று நினையாதவர்கள்
நீசரொன்றுஅருளிச்செய்தார்.

வேதாந்தங்களில் மோட்சத்துக்குபாயமாய் கருமஞானபக்தி - பிரபத்தி - ஆசாரியாபிமானம் - என்கின்ற ஐந்து மார்க்கங்களை விதித்திருக்கின்றதுகள்-இவைகளில்- கருமமாவது - யக்கியந்-தானம்-தபசு-ஸந்தியாவந்தனம் - பஞ்சமஹாயக்கியம் - அக்கிஹோத்திரந் - தீர்த்தயாத்திரை - புண்ணியக்ஷேத்திரவாஸங்- கிருத்ஸனஞ் - சாந்திராயணம்- புண்ணியநதிஸ்தானம் - விரதஞ் - சாதுர்மாஸ்யம்- பலமூலஅசனம் -அதாவது பழங்கிழங்குகளால்ஜீவிக்குதல்- சாஸ்திராப்பியாஸம் - ஸமாராதனம்- ஜபந்- தற்பணாதிபதினெட்டுவிதகருமங்களும் அனுஷ்டிக்கை- கியானமாவது ஹிருதயகமலத்தில்ஸர்வேசுவரனை சங்கசக்கரங் கிரீடமகரகுண்டலங்களுடனே லக்ஷ்மீஸஹிதமாய ஸாதனபுத்தியாலே சார்வகாலமும் பாவனைபண்ணுகை - இதுகைவல்லியத்துக்குப் பிரதான ஸாதனமாயிருக்கும் - பக்தியாவது நல்லபுதல்வர்- மனையாள்- இல்லமாகியவீடு - நிலம் - மாடு - இவைகளிலிருக்கிற ஆசைகளையெல்லாமறுத்து ஈசுவரனிடத்தில் தைலதாரையைப்போல அவைகளிலுண்டானபக்தியை ஒருமடைப்படுத்தி இடைவிடாமல் நினைக்கை - இம்மூன்றுஞ்சாதனபுத்தியாயனுஷ்டிக்கையால்அதுஸ்வரூபவிரோதமென்று கழிப்பார்கள் - பிரபத்தியாவதுபிராட்டியைமுன்னிட்டு ஈசுவரன் திருவடிகளையே மோக்ஷத்துக்கு உபாயமாகப்பற்றி அவனைச்சரணாகதிபண்ணுகை- ஆசாரியாபிமானமாவதுபாகவதாளுடைய அபிமானத்திலே ஒதுங்கியிருக்கை.

இவைகளில் முதல்சொன்ன மூன்றுமார்க்கங்களும் இந்திரியங்களைஜயிக்கவேண்டும் அருமையாலும் - ஜயித்தாலும் வேதார்த்தங்களில் - అహమపి న మమ - భగవత యేవాహమస్మి - என்றுநானும் எனக்குரியனன்று- பகவானுக்கே நான்சேஷபூதன் என்றும்- இவ்வர்த்தத்தைத் திருவஷ்டாக்ஷரத்தில்நமபதத்திலுஞ் சொல்லியிருக்கையால் சேஷத்துவஸ்வரூபத்துக்கு விரோதமாயிருக்கும் - எப்படி என்னில்கருமங்களைச் செய்யும்போது (அஹங்கரிஷ்யே) என்றுசங்கல்பித்துக்கொண்டு நான்கருமஞ் செய்கிறேனென்று சொல்லவேண்டுகையால நான் எனதென்ற அஹங்காரமமகாரங்களிரண்டும்- மோக்ஷத்துக்கு விரோதமாகையால் இம்மூன்றையுந் தியாச்சியகோடியில் சேர்த்திருக்கிறார்கள்.

மேலும்சுருதியில் న కర్మణా - న ప్రజయా - ధనేన - త్యాగేనైకే అమృతత్వ మానశుః என்றுகருமத்தினுலும் புத்திரனுலுந்- தனத்தினுலும்மோக்ஷத்தை யடையமாட்டான் இவற்றைவிடுகையாலேயே அமிர்தமான நித்தியத்துவத்தை யடைகிறானென்று சுருதிசொல்லிற்று.

இம்மூன்றுமார்க்கங்களையும் ஸ்ரீ கீதையில்கண்ணன் ஒன்றுக்கு ஆறு அத்தியாயங்களாக மூவாறு பதினெட்டு அத்தியாயங்களாலே அர்ச்சுனனுக்கு பதேசித்தான்- இதைக்கேட்டு இந்திரியங்களை ஜயி

த்த மஹாருஷிகளில் - தலைவனான - அர்ச்சுனன். చంచలం హి మనః కృష్ణ என்று ஓய்ஸ்வாமி என்ம னது சஞ்சலத்தோடு கூடினதாயிற்றே இவைகளை நான் அனுஷ்டித்துத் தலைக்கட்ட வல்லனோவென் றுசோகித்தான்- தன்னையிச்சித்த ஊர்வசிக்குவயி ற்றைக்கின்றுகாட்டி இந்தமாம்ஸத்தை யேனிச்சிக் கிறுயென்று முறைகூறினவனுக்கனும் இந்திரிய ஜயம்பண்ணி யனுஷ்டிக்க மாட்டேனென்றான் - அதன்பேரில்கண்ணன் - సర్వ గుహ్య తమం భూ యశ్శృణు మే పరమం వచ - యిష్టోసి మే దృఢ యి తే - తతో వక్ష్యామి తే హితం - என்றுவேதத்தில்பா மரஹஸ்யமாயிருந்துள்ள பிரபத்திநிஷ்டையை யுபதேசிக்கிறேனென்று సర్వధర్మాన్ పరిత్యజ్య - మామేకం శరణం వ్రజ - என்றுகீழ்பதினெட்டு அத் தியாயங்களில் சொன்னகருமகியான பகதி யோக ங்களை நன்றுகவிட்டு என்னையொருவனையே சரண மாகவடையென்றும் நான்உன்னுடைய ஸமஸ்தபா பங்களில்நின்றும் விடுவித்துமோக்ஷவீட்டைத்தரு கிறேன் பயப்படாதே என்றும் முன்சொன்னசுரு தியின்அர்த்தத்தைஅருளிச்செய்தான்.

புராணத்தில் యమో వైవస్వతో రాజ - యస్తవై ష హృది స్థితః - తేన చేద వివాదం చేత్ - మాగంగాం మా కురూన్ గమ - என்றுபிர்ம்மருத்திராதிகளைத் திய

மித்து உன்ஹிருதயத்திலிருக்கும் ஸ்ரீமந்நாராயண னுடைய சொத்தானஉன்னை நானென்னதென்றபி மானம் பண்ணாமலிருப்பாயாகில் கங்கைமுதலிய புண்ணிய தீர்த்தங்களில்படியவேண்டாமென்றும். திரவிடவேதத்தில் - ஆழ்வார் - நெறிகாட்டிநீக்குதி யோ என்று கருமகியானபகதிகளைக் காட்டிஎன்னை நீக்கநினைக்கிறாயோ வென்றும் - யாதானும்பற்றி நீங்கும்விரதத்தை நல்லீடுசெய்யும் ) என்றுகருமா திஉபாயங்களைப் பற்றிநீங்கும்விரதத்தையனுஷ்டி க்கிறார்களென்றும் அருளிச்செய்தார்கள்.நம்மாழ் வார்(மற்றொன்றில்லை சுருங்கச்சொன்னோமா நிலத் தெவ்வுயிர்க்குஞ் சிற்றவேண்டா சிந்திப்பே யமை யுங்கண்டீர்களந்தோ) வென்றுசிற்றுதல்சிதறுதலா ய் அத்தால்பெருக்கஒருவியாபாரம் பண்ணவேண் டாம். அதாவதுகருமங்களிற் சேர்ந்த தபசுமுதலா ன வியாபாரங்களைச் செய்யவேண்டாம் சிந்திப் பேயமையு மென்றருளிச் செய்தார் - இதற்கு வியாக்கியானமாய்த் திருமங்கை யாழ்வார் (ஊன் வாடவுண்ணா துயிர்காவலிட்டுவுடலில் பிரியாப் புலனைந்து நொந்து தாம் வாடவாடத் தவஞ் செய்யவேண்டாத மதாவிமையோருல காள்கிற்பீ ர் - தில்லைத்திருச்சித்திர கூடஞ்சென்று சேர்மின்க ளே) என்று பரம பதத்தைத்தங்கள் சுவாதீனமா யாளுமிச்சையை யுடையவர்கள் சரீரம்வாடும்படி யுண்ணாமல் பஞ்சேந்திரியங்களைக் காவலிலிட்டுத்த வஞ்செய்யவேண்டாந் - தில்லைத்திரு சித்திர கூடஞ் சென்றுசேர்மின்கள் என்றருளிச் செய்தார். பெரி

யாழ்வார் (புந்தியால்சிந்தியாதோதியுருவெண்ணு
ம் அந்தியாலாம் பயனங்கென்) என்றுஉடமைநா
ன்என்றும் உயிராவுடையான் ஈசுவரனென்றும்
மனதில்சிந்தியாமல் வேதங்களையோதுவதிலும்
ஜபம்பண்ணுவதிலும் பிரயோஜனமில்லை என்ற
ருளிச்செய்தார்.
ஆசாரியாளில் அருளாளப்பெருமாளெம்பெருமா
னார் கியான ஸாரத்தில் (தீர்த்தமுயன் றுபடிதுஞ்
செய்தவங்கள் செய்வனவும் பார்த்தனைமுன்காத்த
பிரான்பார்பதன்முன்-சீர்துவளா. மன்னனடியோ
மென்னும்வாழ்வு நமக்கிய்ந்ததர்ப்பின்யென்னகு
றைவேண்டுமினி. என்றுபுண்ணியதீர்த்தங்களில்மு
யன்றுஆடுகிறதுந் தபசுகளைச் செய்வதும்அர்ச்சு
னனைக்கண்ணன் பார்ப்பதின்முன் - கண்ணனுக்க
டிமைஎன்றவாழ்வு நமக்குக்கிடைத்தபின்பு என்ன
குறைஎன்றும் - வேதாந்ததேசிகர் (ஆறுநீரில்மர்
வதுஞ்ஜபமதில்மவுனம ஸ்ஹோமம் விருதங்கிந்
தைரீசனருள்வழி ஹிருதயமேமாயன ஸேவிக்னைர்
முமு: - ஸர்வந்தத்பிரயமாக விட்டவனையேதஞ்ச
ம்புகுந்தால்வன் பூனைதன் சிசுவைக்கிரஹிக்கு
மதுபோல்தானெநகிரண்ணுதிகிம். என்றுஇவரும்
அப்படியே புண்ணியனதி புண்ணியதீர்த்தங்களில்
அமர்வது ஜபம் மவுனம் ஹோமம் விரதங்களால்
பிரயோஜனமில்லை ஈசுவரன் இத்தால் அருள்செய்
யான். விக்கினங்களைப் பண்ணுவான்எல்லாமவனுக்
குப்பிரியமாகவிட்டவனையே தஞ்சம்புகுந்தால்அ
வன்பூனைதன்சிசுவைக்கிரஹிக்கிறதுபோல தானெ

அங்கீகரியாதென்ன இதென்னவாச்சரியம். என்றருளிச்செய்தார். ஈசுவரனுக்குப் பிரீதியாக விடச்சொன்னதின்கருத்து தொண்டரடிப் பொடியாழ்வார் (உன்கடைத்தலையிருந்துவாழுஞ் சோம்பரையுகத்தி)என்றுஉன்தலைக் கடையிலிருந்துவாழப்பட்ட பிரபன்னரையுகக்கிறாய் என்றருளிச் செய்தபடியேயிவருமருளிச்செய்தார் - தேசிகர்பாசுரத்திலுமின்னமவர் அருளிச்செய்த சுலோகங்களிலும் பூனைதன் சிசுவைக் கிரஹிக்கின்றதுபோல கிரஹிப்பன் என்றும்- புழுக்குறிதத்தை எழுத்தாய்கிரஹிப்பாரைப்போல அக்கியான சுகிர்தங்களைக்கற்பித்துதன்னையடைவிப்பிக்கிறானென்றுமருளிச்செய்கையால் தேசிகர் தென்னாச்சாரியர்களுடைய ஸம்பிரதாயத்தையுடையவரென்றுகல்விமான்களுக்குவிசிதமாகும்.

இப்படிசுருதிகளிலும் இதிஹாஸமான ஸ்ரீகீதையிலும்-புராணங்களிலும்-ஆழ்வார்களும்ஆசாரியாளும் கருமகியானபக்தியோகங்கள்ஸ்வரூபவிரோதமாகையால் பகவானுக்கு அனிஷ்டமாயிருக்குமென்றருளிச்செய்தபடியால் லோகாசாரியர்ஸ்ரீவசனபூஷணத்தில்- (பிராபகாந்தர பரித்யாகத்துக்கு அக்கியானசக்திகளன்று ஸ்வரூபவிரோதமே பிரதானஹேது)வென்றருளிச்செய்தார் - திருமந்திரத்தில்மத்திமபதத்தையும். பிரதமபதத்தையும். விசாரித்தவர்களுக்குஅவர்அருளிச்செய்ததுசரியென்றுதோன்றும்-பின்னும்தேசிகர் (ஈசனருள்வழே)வென்றருளிச்செய்தபடியால் தங்கள்முயற்சியால்

மோக்ஷம் அடைகிறோமென்று சித்தாந்தம்பண்ணுகிற பாதமில்லாத புண்டரமுடையவர்களுக்கு ஈசுவரனுடையஅருள்கிடையாதென்றும் அத்தாலவர்கள் மோக்ஷமடையார்களென்றும் விசிதமாகும்.

ஆனால் வேதங்களில் கருமாதிவுபாயங்களை விதித்திருக்கின்றதே என்னில் - அப்போது - சுருதி - శ్యేనేనాభిచరన్ యజేత - என்றுசாஸ்திரவிசுவாஸத்துக்காக (சேனவிதி) என்கிற அபிசாரக் கிரமத்தைவேதத்தில் சொன்னதென்று அந்தசூன்னியவித்தையையுஞ் செய்யலாமேஅந்தசூனியத்தைச்செய்து ஒருவனைக்கொன்றால் கோடிஜன்மங்கள் நாயாய்ப்பிறப்பனென்று சுருதுசொன்னதுபோல் கருமங்களைவிதித்து அத்தால் மோக்ஷத்தையடையமாட்டானென்றும் அந்தவேதமே சொல்லியிருக்கின்றது.

இன்னமும்சுருதியில் - జ్యోతిష్టోమేన స్వర్గకామో యజేత என்று ஸ்வர்க்கத்திலிச்சையுடையவர்கள் ஜோதிஷ்டோமத்தினாலே யஜிக்கக்கடவர்களென்று சொன்ன வாக்கியத்தில் நம்பிக்கைபிறக்கைக்குடலாகமுன்சேனவிதியைசொல்லித்து-அந்தசுருதிதானே-క్షీణే పుణ్యే మర్త్యలోకం విశంతి - என்று அந்தஜோதிஷ்டோமத்தினுலுண்டான புண்ணியம் நசித்துப்போனால் மறுபடியும்பூலோகத்திலபிறக்கின்றனென்றுசொல்லித்து - இனிமேனு

தலில்லாத ஸ்தானமென்று வென்றுவிசாரித்தவர்களு
க்குசுருதி - 𑌨 𑌚𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 - என்றும் (மீட்சி
யின்றிவைகுந்தமா நகர்)என்றும்மீளுதலில்லாதஸ்ரீ
வைகுண்டமென்று உபயவேதங்களிலுஞ்சொல்லி
யிருக்கின்றது- இவ்வர்த்தத்தை லோகாசாரியர் -
(இதுதான் பூர்வ விஹிதஹிம்ஸைபோலேவிதிநி
ஷேதங்களிரண்டுக்குங் குறையில்லை - அத்தைசாஸ்
திரவிசுவாஸத்துக்காகவிதித்து - இத்தைஸ்வரூபவி
சுவாஸத்துக்காக விதித்த) தென்றருளிச்செய்தார்-
அதுஎன்றது சேனவிதி - இதுஎன்றது - கருமாதி
உபாயங்கள் - அது(தோல்புரையென்றும்இதுமற்
மஸ்பரிசையென்றும்)அருளிச்செய்தார்- சேனவி
திதேஹத்தைக்கொல்லும்இந்தக்கருமாதி உபாய
ங்கள் அஹங்காரங்களுடனே கூடினதாகையால்
இது ஆத்மாவைக்கொல்லுமென்றருளிச் செய்தா
ர்- அத்தைப்பற்றி (ஸந்நியாசிமுன்புள்ளவற்றைவி
டுமாப்போலே இவ்விளவு பிறந்தவன் இவற்றைவி
ட்டால் குற்றம்வாரா) தென்றருளிச்செய்தார் -அ
தாவது ஸந்நியாஸி யாஶ்ரமத்தில் பிரவேசித்தவர்
கள் பரப்பிரம்மத்தினிட திருவடிகளில் டரநியாஸ
ம்பண்ணி அதற்குமுன்புள்ள பிரம்மசரியங் - கிர
ஹஸ்தாஶ்ரமங்களில்விதித்தகருமங்களைத்தியாகந்
யம்பண்ணவேணு மென்று விதித்திருக்கு மிசப
போலே பிரபன்னாஶ்ரமத்தில் பிரவேசித்தவனுக்கு
கருமக்கியுனபக்தியோகங்களில்விதித்தவைகளைந
ன்றுகளிட்[illegible]வேணுமென்றுகண்ணன் ஸ்ரீகீதையில்ச்

ரிஷ்காரமாயருளிச்செய்தான் - அத்தையே ஆழ்வார்களும் பிள்ளைலோகாசாரியரும் வேதாந்தாசாரியரும் அருளிச்செய்தார்கள் -

பிரபத்திநிஷ்டையாவது - పరిత్రాణాయ సాధూనాం - వినాశాయచదుష్కృతాం - ధర్మసంస్థాపనార్థాయ - సంభవామియుగేయుగే - என்று வேதங்களில் சொன்னவிசேஷிதர் மத்தைஸ்தாபனம் பண்ணுவதற்கு யுகந்தோறும் யுகந்தோறும் அவதரிக்கிறேனென்றுசொல்லிச் சேனைகளுடைய தூளுகளாலே தூஸரிதமான திருக்குழலையுந் தேருக்குக் கீழே நாற்றின திருவடிகளுமாய் நின்றஸாரத்தியவேஷத்தோடே • మామేకం శరణం వ్రజ என்றுகீழ்பதினெட்டு அத்தியாயங்களில்சொன்ன கருமகியானபக்தியோகங்களை னன்றாகவிட்டு என்னையொருவனையேசரணமாக வடைஎன்று தாயானவள்முலைக்கடுப்பாலே பாலைத்தறையிலேபீச்சுமாப்போலே ஆத்மாக்களுடைய அனர்த்தத்தைக்கண்டுஸஹிக்கமாட்டாமல் அவர்களுடைய உச்சீவனத்துக்குக் கிருஷிசெய்ய அவதரித்தவனுகையாலே கிருஷ்ணனென்றுபேர்படைத்துத் தன்திருவடிகளைக் காட்டி இத்தைச் சரணமாகவடை யென்றுபதேசித்தது எதுவோ அதுதான் பிரபத்தியென்றுபேர் -

మామేకం శరణం వ్రజ - என்று கண்ணன் அருளிச்செய்தது பிரம்மருத்திராதிகளை யொழிந்து என்னை யொருவனையே சரணமாகவடையென்பது கண்ணனுடைய கருத்தென்று பாதயில்லாத் திருமன

தாரிகள் அர்த்தஞ்சொன்ஞர்கள் - அது சரியாகமா ட்டாது - அந்தசுலோகத்துக்குக்கீழே கருமாதி உ பாயங்களை யுபதேசித்து அதுசெய்துதலைக்கட்டவ ரிதென்ற அர்ச்சுனனைப்பார்த்து அவைகளை நன்று க விட்டென்னை யொருவனையே சரணமாகவடை என்று சொல்லுகிறபிரகரணமாகையால், இதரதே வதைகளுடைய பிரஸங்கமில்லாமையாலும் கரு மாதிஉபாயங்களை நன்றுகவிட்டென்னை யொருவ னையேபற்றென்று சொன்னதற்கு விரோதிக்கிறப டியாலும் அதுசரியாகமாட்டாது - பிரபத்தியா வது (பகவத்பிரவர்த்த விரோத ஸ்வப்பிரவர்த்தநி வர்த்திபிரபத்திஃ) என்றுபேர் - அதாவது பகவா னுடைய பிரவர்த்திக்குவிரோதங்களான தங்கள்மு யற்சியில் நின்றும் நிவர்த்தமாகிறதெதுவோ அது பிரபத்தி என்றுபேர்.

இந்தபிரபத்தி நிஷ்டையைக்குறித்து சுபாலோ

பனிஷத்தில் - మాతా పితా భ్రాత నివాసశ్శరణంసు

హృద్గతిర్నారాయణః - என்று ஸ்ரீமந் நாராயண

ன் இவ்வாத்மாக்களுக்குமாதா- பிதா - பிராத - இ ருப்பிடம். இரக்ஷகன் சிநேகிதனுகையால்மோக்ஷ த்துக் குபாயமும் அவனே என்று சுருதிசொல்லிற் று. பின்னும் கடவல்லி முண்டகோப னிஷத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய இரண்டுதிருவடிகளை உ பாயமாகப் பற்றுகிறேன் என்றுசொல்லியிருக்கின் றது. இதற்குச்சுருதி (த்வயம்) என்ற மந்திரமாயுப

தேசிக்கப் பட்டதாகையால் அந்தச்சுருதியை யிதி
லெழுதவில்லை ஆனால் இந்தபிரபத்தி நிஷ்டையுங்
கருமங்களில்சேர்ந்த தபோநிஷ்டையும் இரண்டும்
ஒன்றாய்கணிசிக்கத்தக்கதோ இந்தபிரபத்திக்குஅ
திசயமுண்டோவென்னில் - சுருதி - తస్మాన్న్యాస
మేషాంత పసామతిరిక్త మాహుః - என்றுபரப்பிரம்
மத்தைசரணாகதியா யடையப்பட்டதபஸாகையா
ல்பரணியாஸமென்ற இந்ததபஸைசிலாக்கியமென்
றுவேதபுருஷன்சொல்லியிருக்கின்றான்-இந்தவேத
ஸாரத்தையே கீதையில் கண்ணன் என்னையொருவ
னையேசரணமாகவடைஎன் றருளிச்செய்தான் - உ
டவல்லிஉபநிஷத்தைஆழ்வார் (அகல்கில்லேனிறையு
மென்றலர்மேன் மங்கையுறைமார்பா நிகரில்புகழா
யுலகமூன் றுடையாயென்னை யாள்வானே நிகரிலம
ரர்முனிக்கணங்கள்விரும்புந் திருவேங்கடத்தானெ
புகலொன்றில்லாவடியேனுன்னடிக்கீழமர்ந்துபுகு
ந்தேனே) என் றும்.கண்ணன் கீதையில்சொன்னவர்
த்தத்தை (குறிக்கொள் ஞானங்களாலெனையூழிசெ
ய்தவமுங் கிறிக்கொண்டிப்பிறப்பேசிலநாளிலெய்
தினன்யான்உறிக்கொண்டவெண் ணெய்பாலொளி
த்துண் ணுமம்மான்பின் - னெறிக்கொண்ட நெஞ்
சனாய்ப்பிறவித்துயர்கடிந்தே என்று உறியிலேவைத்
திருக்கிறவெண்ணெய்பாலைஒளித்துண் ணும்அம்மா
னாலே பின்னேசொல்லப்பட்ட நெறியாகியபிரப
த்திநிஷ்டையில் பிரவேசித்தநெஞ்சையுடையவனா
ய்குறியென்கிறஅவதானத்தினாலே எச்சரிக்கையைக்

கொண்டிருக்கிற ஞானயோகத்தினாலே அனேக
கற்பங்கள் தபசுசெய்து அத்தாலடையும்பலமான
மோக்ஷத்தை'கிறிக்கொண்டு' கண்ணன் திருவடிகளை
யேஉபாயமாகக்கொண்டு 'இப்பிறப்பே' கருமகியா
னங்களைப்போலே அனேகஜன்மங்களின்கடைசியி
லெனறிக்கே 'சில்நாளில்' முன்சொன்னவைபோலச
ஞ்சிதபாபங்கள்நசித்தபின்பன்றிக்கேதேஹாவஸா
னத்தில்'யெய்தினன், முன்சொன்னகருமாதிகள்மந்
திரலோபக்கிரியாலோபங்களால் பிர்ம்மரக்ஷஸாய்
ஒருவேளைபிறக்கவும் ஹேதுவில்லாமல்பிர்ம்மாஸ்
தரம்வாய்மடியாதுபோல அடைந்தேன் என்றும்.
(பிணக்கறவறுவகைச் சமயமுநெறியுள்ளியுரைத்த
கணக்கறுநலத்தனனந்தமில்லாதியம்பகவன் வணக்
குடைத்தவநெறிவழிநின்றுபுறநெறிகளைகட்டுண
க்குமின்பசையறவவனுடை யுணர்வுகொண்டுணர்ந்
தே) என்றுஅறுவகைச்சமயங்களிலுண்டானபிணக்
குகளறும்படியாக வேதமார்க்கத்தை விசாரித்துஉ
ரைத்த கணக்கில்லாதகலியாணகுணங் களையுடைய
பகவானாலேஅருளிச்செய்தபிரபத்திநிஷ்டையில்வி
சுவாஸமுண்டாய் ஸ்திரமாகவிருந்து அதற்குப்புற
நெறிகளாகிய கருமகியான பக்தியோகங்களாகிற
களைகளை வேரோடெகெல்லியெடுத்துஅதாவதுயவ
ற்றைநன்றாகவிட்டு அவனுடைய உணர்வுகொண்டுச
ம்ஸாரமென்றசமுத்திரத்தைவற்றப்பாருங்கோள்
என்றும்-தேசிகரும்- శాఖానాము పరిష్ఠేనమునునా
మూలేనలబ్దాత్మకః - సత్తా హేతుసకృత్ జపేనవా

సునాకాలంద్వ యేనక్షిపన్ - వేదాన్త సవిహారసాగ
ధిక్షియాగుం భే నవిస్ఫుంభిత - స్వార క్షో యదిక శ్చిద
స్తి భువనే నాథస్స యూదస్యనః - என்றுவேதசாகை

களின்முடிவில்சொல்லுகின்ற மூலமந்திரமானதி
ருவஷ்டாக்ஷரத்தில் முதல்பதத்தில் சொன்னசே
ஷித்வத்தையும் - மத்திமபதத்தில் சொன்ன பார
தந்திரியத்தையும் - ஆத்மாக்களுடைய ஸத்தைக்
கு ஹேதுவாய் ஒருக்கால் ஜபித்தால் பரமபதத்
தைக்கொடுக்குமதான த்வயம் என்ற மந்திரத்தினு

லேகாலங்களை நசிக்கும்படி பண்ணப்படும்- శ్రీ
శ్రీగసీపదీ త్రై: - என்று சுருதி சொன்னபடியே

வேதசிகரத்தில் பிரகாசிக்கின்ற ஸ்ரீபார்த்தஸாரதி
யினுடைய கியானத்தினாலே அதிரஹஸியமாக
வெளிப்படுத்தப்பட்டிருக்கின்ற வேதாந்தஸாரத்

தையறிந்த - సమహాత్మా సుదుర్లభః - என்கிறபடி

யே அப்படிப்பட்டமஹாத்மாக்களுண்டாயிருப்
பார்களாகில் அவர்களெனக்கு நாதராகிறதுமன்றி
யில் என்னுடையவம்சங்களுக்கும்நாதராவர்களெ.
னறருளிச்செய்தார் - திருமந்திரத்தில் சேஷித்து
வமும் பாரதந்திரியமும்முக்கியமாய்ச்சொல்லிசர
மச்லோகத்தில் அவைகளுக்குவிரோதங்களான அ
ஹங்காரமமகாரங்களோடே கூடினகருமகியான
பக்தியோகங்களைவிட்டு என்னையொருவனையேசர
ணமாகவடைஎன்றுகண்ணனருளிச்செய்தபடியா

ல் ஸ்வயத்நத்தால் அடைகிறோமென்றவர்களுக்கு திருமந்திர ஜனிதஞானமில்லாமையால் தேசிகர் தென்னாசாரியாளை நாதாக்களென்று அருளிச்செய்தபோதும் வடமாசாரியர்களுக்குந் தென்னாசாரியாள் நாதராகக்குறையில்லை - இதற்குமாறு சொல்லில் தேசிகர் கருத்துக்குதூரப்பட்டவர்களாவர்கள். இந்தசுலோகத்தில் எங்களுக்கு சம்மந்தமுண்டு அத்தால் தேசிகர் ஸம்மந்தமுண்டென்றால் அப்போது அவர்கள் தங்களை தென்னாசாரியஸம்பிரதாயஸ்தர்களென்றெ கருதவேண்டியது -

தென்னாசாரியாள் ஒரு ஆவர்த்திசரணாகதிபண்ணால் வட ஆசாரியாள் நாங்கள் மூன்று ஆவர்த்திசரணாகதிபண்ணுகிறோம் - அத்தால் நாங்கள் மோக்ஷமடையவேணுமென்று சொல்லும்பக்ஷத்தில் - அந்தபிறபத்தியை சாதனமாக நினைக்கையால் அனேகம் ஆவர்த்திசரணாகதிபண்ணினாலும் மோக்ஷமடையமாட்டார்களென்றும் ஒரு ஆவர்த்திசரணமடையவேணுமென்றும் பிரமாணங்கள் சொல்லியிருக்கின்றது - సకృదేవ ప్రపన్నాయ - తవాస్మీతిచయాచతే - అభయంసర్వ భూతేభ్యో - దదామ్యేత ద్వ్రతం మమ - என்று ஒருக்கால் சரணாகதி பண்ணினவர்கள்பொருட்டு சுருதியில் - అథ సోభయంగతో భవతి - என்று பகவானை யடைந்தவர்கள் அபயத்தை யடைகிறார்களென்று சொன்ன

படியே அபயத்தைக்கொடுக்கிறேன் அதுஎனக்கு விரதம் என்றருளிச் செய்கையால் தென்னுசாரியாள் ஒருகால் சரணுகதிபண்ணுவதினுலே மோக்ஷமடைகிறுர்களென்று பிரகாசமாகின்றது. ஸ்ரீ பாஞ்சராத்திரத்தில் - చితః పరమచిల్లాభే ప్రపత్తిరపి నోపధిః - విపర్యయేతున్యవాస్య - ప్రతిషేధాయపాతకం - என்று சித்தான ஆத்துமாவுக்குப் பரமசித்தானஈசுவரன்லபிக்கும்போதுஇவன்பண்ணுகிறபிரபத்தி உபாயமாகமாட்டாது என்றும் - மோக்ஷதசையிலீசுவரனிவனைப்பெற நினைக்கும்போதுஇவனுடையபாபங்கள் பிரதிஷேதிக்கமாட்டாதென்றும் அதாவதுதடங்கல் செய்யமாட்டாதென்றும்பகவானருளிச்செய்கையால் தென்னுசாரியாள்பிரபத்தியைசாதனமாகக்கருதுவதில்லை.இவ்வர்த்தத்தை லோகாசாரியர் ( இவனவனைப்பெற நினைக்கும்போதுவிவன் பண்ணுகிறபிர பத்தியும்உபாயமன்று அவனிவனைப்பெற நினைக்கும்போது பாதகமும்விலக்கன்று) என்றருளிச்செய்தார் - இந்தஸ்ரீபாஞ்சராத்திர பிரமாணத்தால் வட ஆசாரியர்கள்பாபங்களைக் குறித்துபிராயச் சித்தம் பண்ணிக்கொள்ளுவது தியாச்சியமாய்விட்டுது. பிராயச்சித்தம்பண்ணுவதற்குப் பிராயச்சித்தம் பண்ண வேணுமென்று சொல்லுகிற பிரமாணங்களைப் பின்னுலெவிவரமாய்ச்சொல்லுகிறேம்.

பிரபத்தியை ஸாதனமாக்கிறுல் ஈசுவரன்ரக்ஷிக்

கமாட்டானேயென்னில் ரக்ஷிக்கமாட்டானென்று ங் கைவிடுவனென்றும் கியானஸாரத்தில் (சரணாகதி மற்றோர்சாதனத்தைப்பற்றில் - அரணாகாதஞ்ச ணைதன்சேயை - முரணழியக் - கட்டியதுவேறோ ர்கயிறுகொண்டார்ப் பதனமுன் - விட்டபடை போலவிடும்) - என்று சரணாகதியை ஸாதனமாக்கி னால் சணற்க்கயிற்றைக்கண்ட பிரம்மாஸ்தரம் ந ழுவினதுபோலச் சரணாகதி நழுவுமென்றருளிச் செய்கையால் மூன்று ஆவர்த்திக்குமேல்முந்நூறு ஆவர்த்திசாதனபுத்தியாய்சரணாகதிபண்ணினபோ தும் வட ஆசாரியாள் அத்தால் மோக்ஷத்தைய டையமாட்டார்களென்று பிரமாணங்கள் சொல் லுகின்றது - இந்தபிரபத்தியை லோகாசாரியர் (சைதன்னியகாரியம் - ராகப்பிராப்தம் - ஸ்வரூப னிஷ்டம் - அப்ரதிஷேதத்ஜோதக) மென்றருளி ச்செய்தார் - அதாவது ஈசுவரன் விரஹேதுகமா கரக்ஷிக்கும்போது அசேதனத்துக்குந் தனக்குமு ண்டானவாசிதோன்றவும் - ராகமென்றபக்தியின் காரியமாயும் - சேஷித்துவஸ்வரூபத்துக்குசிதமா யும் - விலக்காமையை சூசிப்பிக்கைக்காகவும் - இ வன் பிரபத்திபண்ணுவதென் றருளிச்செய்தார் -

அப்படியேதேசிகரும் - ఆర్తేష్వాశుఫలాతదన్య విషయేష్వచ్ఛిన్న దేహాంతరా - వహ్న్యాదేరనపేక్ష ణాత్త సుభృతాంసత్యాదివద్వ్యాపిని - శ్రీరంగేశ్వ రయావదాత్మనియతత్వత్వారతంత్రోచితత్వ త్త్యే వత్వదుపాయధీర పిహితస్వోపాయభావాస్తు

మే - என்று - இந்தப்பிரபத்தியானது ஆர்த்தப்பிர பன்னாய் அப்போதே திருவடிகளை யடையவே ணுமென்றவர்களுக்குச் சீக்கிரத்தில் மோக்ஷத்தை க்கொடுக்குமதாய் - திருப்தப்ரபன்னருக்குத்தே ஹாவஸானத்தில் கொடுக்கப்பட்டதாய் - அக்கினி காரியங்களானகருமாதிகளசேதனனுடையமுயற் சியை யபேக்ஷித்திருக்குமதுபோலன்றிக்கே அத் தை ஸஹியாதாய் - ஸ்ரீரங்கநாதா நியதமான உன் னுடைய பாரதந்திரியத்துக்குசிதமானதாய் - త్వ య్యేవ - உன்னிடத்திலேயே - త్వమేవోపాయః - நீ யே உபாயமென்றகியானம் - అపిహితం - மறைக் கப்பட்ட - స్వోపాయభావం - பிரபத்தியை யுபா யமாக நினைக்கின்ற அபிப்பிராயம் - మే - எனக்கு- అస్తు - ஆகக்கடவது - என்பது முன்சொன்ன ஸ்ரீ பாஞ்சராத்திரத்தில் பிரபத்யுபாயமாகமாட்டா தென்று சொன்னதை பிள்ளைலோகாசாரியர் (வி ரஜ - என்ற ஸ்வீகாரத்தில் உபாயபுத்திதவிர்க்கிற து) என்றருளிச்செய்தார் - அந்தகருத்தை தேசி கரும் மறைக்கப்பட்டிருக்கின்ற உபாயபுத்தி எ னக்குண்டாகவேணுமென்றருளிச்செய்தார் - அ தாவது பிரபத்திப்பண்ணுவதை யுபாயமாக புத்தி ப்பண்ணுவது மறைக்கப்பட்டால் பிரபத்திக்குபா யமில்லையென்றுகருத்து- இதற்குஆழ்வாரும்(இசை வித்தென்னையுன் றாளிணைக் கீழிருத்துமம்மானே) என்றும் ( ஆறெனக்குநின்பாதமே சரணாகத் தந்

தொழிந்தாய்)என்றும் (அதுவுமவனதின்னருளெ) என்றும் என்னை யிசைவித்தென்கையால் சேதனனுடைய இசைவுக்குக்கிருஷிசெய்தவன் ஈசுவரன் என்றும் - அவனையே உபாயமாகவும்-இந்நன்மை அவனருளாலே யுண்டாயிற்றென்றும் அருளிச்செய்தபடியால் ஈசுவரனுடைய முயற்சியினாலுண்டான பிரபத்தியை தன்முயற்சியாலுண்டானதாய் நினைத்தால் அவன்கைவிடுவன்என்றுஅருளாளப்பெருமாளெம்பெருமானாருளிச்செய்தார்.

இந்தபிரபத்தியைக்குறித்துவடவாரியர்கள்சொல்லுவது ஸ்ரீபாஞ்சராத்திரத்தில் - ఆను కూల్య స్య సంకల్పం - (ప్రా)తికూల్య స్య వర్జనం - రక్షిష్య తీతి విశ్వా సౌగో ప్తృ త్వ వరుణంతథా - ఆత్మ నిక్షేప కార్పణ్యం - షడ్విధా శరణాగతిః - என்று சாஸ்தரங்களில்விதித்தவைகளைச்செய்தும்.விலக்கினவைகள்முழுதும் விட்டும் - ஈசுவரன்ரக்ஷிப்பனென்றமஹாவிசுவாசமுண்டாகியும் ரக்ஷகனைரக்ஷியென்றுபிரார்த்தித்துந்தன்னுடையநைச்சியங்களைவிண்ணப்பஞ்செய்தும் இந்தஐந்துலக்ஷணங்களுண்டானபின்பு ஆத்மநிக்ஷேபம் என்றஆத்மஸமர்ப்பணம்பண்ணியாஸமென்ற சரணாகதிபண்ணவேணுமென்றும்இதற்குப்பிரமாணம் - న్యాసః పంచాంగ సంయుతః - என்று பரனியாஸமஜந்து அங்கங்களுடனெகூடியிருக்கவேணுமென்றுசொல்வதற்கு

அர்த்தமிதுவென்றுசொன்னார்கள்-இதற்குத்தென்னரியாள்கடலில் அலை ஓய்ந்த பின்பு முத்துசலாபம்முழுக நினைப்பார்போலிருக்கின்றது-(மின்னின்னிலையில மன்னுயிராக்கைகள் என்னுமிடத்திறையுன்னுமிநீரே) என்று அருளிச்செய்த மின்னின் நிலையில்லாதசரீரமாயும் - (பொய்நின்ற ஞானமும்பொல்லாவொழுக்குமழுக்குடம்பும்) என்கிறபடியேபொய்யானஞானமுந் துராசாரங்களுமுடையசரீரத்தில்மெஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி இருக்கையால்அவ்வைநந்து முண்டாவதற்குமுன்னமே இறந்துபோனால் (நமன்றமர்பற்றியெத்திவைத் தெரியெழுகின்ற செம்பினாலியன்றபாவையைப்பாவிதழுவென மொழிவதற்கஞ்சிநம்பனேவந்துன் திருவடியடைந்தேனனிசாரணியத்துளெந்தாய்)என்கிறபடியே நரகம் சித்தமாகையால்(அவகாதஸ்வேதம்போலெ)அதாவது நெல்லுக்குத்தவாரம்பித்துக் கொண்டால் வேர்வை தன்கடையாயுண்டாமாப்போல பரநியாசம்பண்ணிவிட்டால்பின்புகசுவரன்(சார்ந்தவிருவல் வினைகளுஞ்சரித்துமாய்ப் பற்றறுத்துத்தீர்ந்து தன்பால்மனம்வைககத்திருத்திவீடுந் திருந்துவான்) என்கிற படியேசாஸ்தரவிருத்தமான துராசாரங்களை பகவான் தன்கடாக்ஷத்தினாலே கழித்துக்கொள்ளுவான்என்றுசொல்லிசரணாகதியைமுதல்முன்னமேபண்ணுவார்கள்.

இதுவுமனறி- చిత్తః పరమ చిల్లా ళ్ప్రప త్రిపనో షధిః
ఏపర్య యేత్సు నైవాస్య ప్రతిష్ఠా ధాయవాతకం - என்

று இவன்பண்ணுகிற பிறபத்தியான பரனியாஸம் மோக்ஷஸாதனம் அன்றென்றும் பிறபன்னனான இவனுடையபாபங்கள் மோக்ஷபிரதி பந்தகம் அன்றென்றும்அந்தஸ்ரீபாஞ்சராத்திரத்தில்தானெசொல்லுகையால் லோகாசாரியர்(இவன்அவனைப்பெற நினைக்கும்போதுஇவன் பண்ணினபிறபத்தி யபாயம் அன்று அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகாதிகளும்விலக்கன்று) என்றருளிச்செய்தார் - ஆகையால்வடவாரியர்களுக்கு ஐந்து அங்கங்களுண்டாகப்போகிறதும் இல்லைஅவர்கள் ஸாதனபுத்தியைவிட்டுசரணாகதிபண்ணப்போகிறதுமில்லை. கியானசாரத்தில் (ஈனமிலாவன்பரொன்றுமெய்திலாமானிடனாயெல்லாவண்ணத்தாலுந்.தானறிய. விட்டார்கெளியன்விடாதார்க்கறவரியன். மட்டார்துழாயலங்கன்மால்)-என்கிறபடியே சாதனபுத்தியைவிட்டுத்தன் திருவடிகளையடையும்படி நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே கடாக்ஷித்தான்என்கிறவர்களுக்குஎளிமையாயிருப்பன்.ஸ்வயத்தனத்தைவிடாதவர்களுக்குமிகவுந் தூரஸ்தனாயிருப்பன்.

தசவிதவைஷ்ணவமென்று வைஷ்ணவத்தில்பத்துவிதங்களாகச்சொல்லியிருக்கின்றதுகள் - வுபயகலையாரில்இன்னார்இவ்விதஅதிகாரிகளென்று தங்களுக்குள்ளே நிச்சயித்துக்கொள்ளும் படியாய்த் தெரிவிக்கிறோம் - అద్వేషిశ్చానుకూలశ్చ దివ్యనామధర స్తథా - చక్రాంకీమంత్రపాఠీచ - వైష్ణవశ్చ తతఃపరం - శ్రీవైష్ణవఃప్రపన్నశ్చ - యేకాంతీనవ

శః స్తథా - పరస్మై కాంత్రిభిర్విజ్ఞేయ - వక్ష్యే తేష్వేష్ష
వాస్త్రితాః - என்று அத்வேஷி யென்றும் - ஆனு
கூலர்களென்றும் - திருநாமதாரிகளென்றும் - ச
க்கராங்கண பாரர்களென்றும் - மந்திரபாடி யென்
றும் - வைஷ்ணவர்களென்றும் - ஸ்ரீவைஷ்ணவர்
களென்றும் - பிரபன்னர்களென்றும் . ஏகாந்திக
ளென்றும் - பரமைகாந்திகளென்றும் - பத்துவி
தங்கள் - இவர்களில் அத்வேஷிகளாவார் - విష్ణులో
కనియంతారం - వైష్ణవాన్ లోకపావనాన్ - దృ
ష్ట్వా న ద్వేష్టి యో మర్త్యః - సోద్వేషః పరికీర్తితః -
என்று லோகநியந்தாவாகிய விஷ்ணுவையும் - தங்
களுடைய வீக்ஷணமான பார்வையாலும் - இரக்க
த்தோடேகூடின நினைவினாலும் அப்படிப்பட்ட
ஸ்பரிசத்தினாலும் மச்சியங்கள் கூர்மங்கள் பக்ஷிக
ள் இம்மூன்றினால் தங்கள் முட்டைகளைவிர்த்திசெ
ய்விக்குமாப்போல் லோகத்தாருடையபாபங்களை
பாவனம்பண்ணப்பட்ட வைஷ்ணவர்களையும் பா
ர்த்துத்வேஷியாமலிருக்குமவர்கள் - உ. அனுகூல
ராவார் - వాసుదేవోత్సవాంశ్చైవ - మహాభాగవ
తాంస్తథా - అనువర్తేత యో నిత్యం - అనుకూలవుదా
హృతః - என்று வாசுதேவனுடைய உச்சவத்திலும்
மஹாபாகவதர்களுடைய உத்ஸாஹத்திலும் இடை
விடாமல் அனுவர்த்திப்பவர்கள் - ௩ - திருநாமதா
ரிகளாவார் - நினைத்தமாத்திரத்திலும் உச்சரிக்க

மாத்திரத்திலும் ஸமஸ்தபாபங்களையும் நன்றாக நசிப்பிக்கும்பாவனமான விஷ்ணுவின் திருநாமத்தை தரித்துக்கொண்டிருக்குமவர்கள் - ௪ - சக்கிராங்கிகளாவார் - శ్రుతిస్మృతిపురాణేషు - విహితం చక్రధారణం - యోభిభర్తిహరేశ్చక్రం - చక్రధారీసఉచ్యతే - என்று காண்டவவேதத்தில்- తప్తంచక్రంద్విభుజేధార్యే త్వోర్ధ్వధ్వఽపుండ్రమాలిఖేత్ - என்று சங்கசக்கரம் ஊர்த்துவபுண்டரந் துளசீமணிமாலிகைகளை தரிக்கும்படியாயும் ஆரணத்தில் - అతప్తతనూర్నతదామో అశ్నుతే - என்றும் அப்படி தப்தசக்கரந் தரியாதவர்களுடைய தனுவானசரீரத்தைக்கண்களினால் பார்க்கக்கூடாதென்றுஞ் சொல்லியிருக்கின்றபடியே சங்கசக்கரந்தரித்தவர்கள் - ௫ - மந்திரபாடிவைஷ்ணவராவார் - అష్టాక్షరస్య మంత్రస్య - స్మరణాన్ముక్తిదోహరిః - తమావర్తేత యోనిత్యం - మంత్రపాఠీసఉచ్యతే - என்று நினைத்தமாத்திரத்தில் ஸ்ரீ ஹரியினுடைய திருவடிகளாகிற முக்தியைக்கொடுக்கும்படியான திருவஷ்டாக்ஷரத்தை இடைவிடாமல் ஜபிக்குமவர்கள் - ௬ - வைஷ்ணவர்களாவார் - దేవతాంతరవన్నిత్యం- శబ్దాదీనపిసత్స్యయ

విష్ణు(ప్రా) ప్తిఫలాకాంక్షీ-భక్త్యుపాయోహి వైష్ణవః.

என்று இதரதேவதைகளிடத்தில் திரணீகாரத்தை யுடைத்தாயிருக்கவேண்டினதுபோல சப்த-ஸ்பரிச - ரூப - ரஸ - கந்தங்களாகிற ஐம்புலன்களின லுண்டான சிற்றின்பத்தில் குத்சிதாபுத்தி பண்ணி அதாவது துச்சமாகக்கருதி விஷ்ணுவினிடத்தில் மற்றொருபலங்களை அபேக்ஷியாமல் திருவடிகளை யடைவதுவே பலமாகக்கருதி ஈசுவரனிடத்தில் பண்ணப்பட்டபக்தியை உபாயமாகக்கருதியிருக்குமவர்கள் - எ - இதற்குமேல் ஸ்ரீவைஷ்ணவர்களாவார் - బాహ్య ధనే విరతాః సర్వే - సత్య క్ష్మ క్ష్మాసదాశుచిః - భక్తిమార్గే పుండరీకాక్షే - శ్రీవైష్ణవఉదాహృతః - என்று எம்பெருமானுக்குப்புறம்பான தேவர்க்கள் - இதரமானமந்திரங்கள் - கரும - ஞான - பக்திமுதலான இதரஸாதனங்கள்- இதரவிஷயங்களாகிய போகங்களை நன்றாகவிட்டு அதனாலேபரிசுத்தமானமனதோடேகூடி புண்டரீகாக்ஷனிடத்தில் சாதனபுத்தியன்றியில் பக்தியையுடையவர்கள். இந்தவிஷியத்தில் தென்னுசாரியாள் எல்லாம்விட்டார்களோவென்னில் இதற்குமுன்சரித்திரத்தில் பாஞ்சராத்திரபிரமாணங்களாலே இதற்குப்பரிஹாரஞ்சொன்னோம் அதில்கண்டுகொள்வது-அ-இனிபிரபன்னராவார்- శబ్దాదీ విషయాంశ్చాపి - దేహాపాధికబాంధవాన్ - త్యక్త్వా చార

న్యస్తభరః - సంప్రపన్న పురుషార్థః - என்று சப்
தாதிவிஷயங்களிலும் பந்துக்களிடத்திலும் உண்
டான விருப்பமற்று சுபாலோபநிஷத்தில் - మా
తా పితా భ్రాతనివాసశ్శరణంసుహృద్గతిర్నారా
యణః - என்று இவ்வாத்மாக்களுக்கு ஸ்ரீமந்நாரா
யணன் மாதா - பிதா - இருப்பிடம் - ரக்ஷகன் -
சிநேஹிதனாகையால் மோக்ஷத்துக்குபாயமும் அ
வன் திருவடிகளென்று பிரபத்தி நிஷ்டையைக் கு
றித்துச்சொல்லியிருக்கிறபிரகாரம் ஈச்வரனிடத்தி
ல் தன்னுடைய ரக்ஷணத்தைக்குறித்து ஸர்வபாரங்
களையும்அவன் திருவடிகளில்வைத்திருக்குமவர்கள்.

௬. ஏகாந்திகளாவார் - ఏకాంతీతు వినిశ్చిత్య - దే
వతా విషయాంతరైః - భక్త్యుపాయం సమంకృష్ణ
ప్రాప్తౌ కృష్ణైకసాధనః - என்று இதரதேவதை
களையும் இதரவிஷயங்களையும் பக்தியையுபாயமா
கக் கருதுவதையுஞ் சமானமாக நிச்சயித்துக்கிரு
ஷ்ணனையடைவதற்கு அவன் திருவடிகளையே ஸா
தனமாகக்கருதியிருக்குமவர்கள் - இவ்வர்த்தத்தை
ஆழ்வார் (ஆறெனக்கு நின்பாதமே சரணாகத் தந்
தொழிந்தா யுனக்கோர் கைமாறுநானொன்றிலே
னெனதாவியுமுனதே) என்று - ஆறென்று உபா
யம் - மோக்ஷத்துக்குபாயமாக தேவர் திருவடிக
ளையே தந்தீர் - உமக்குப்பிரதியுபகாரமெனக்கொ

ன்றுமில்லை என்றருளிச்செய்தார் - தந்தொழிந்தா என்றும் - இசைவித்தென்னையுன் றாளிணைக்கீழிருத்துமென்றும்அருளிச்செய்கையால்,தங்களுடைய முயற்சியால் அதாவது தங்களுடைய சுகிர்தத்தால் அவனை யடைகிறோமென்ற வடவாரியாளுக்கும் இந்தத்திருவாய்மொழிக்கும்சம்பந்தமில்லைஎன்று கல்விமான்களுக்கு விசிதமாகும்.

ம. பரமைகாந்திகளாவார் - దేవతాంతరశబ్దాదిభక్తికృష్ణాఖ్య హేతుషు - సామ్యం కృత్వా రమేశాంశే - హరౌ స్వామిత్వబుద్ధిమాన్ - என்று முன்சொன்ன இதரதேவதைகளையும் - சப்தாதிவிஷயங்களையும் - பக்தியைமோக்ஷத்துக்கு உபாயமாகக்கருதுவதையும் - அப்படியே கிருஷ்ணனையடைவதற்கு அவனையேயுபாயமாகக்கருதுவதையும் சமானமாக நினைத்து ஸ்ரீஹரியை ஸ்வாமிஎன்றுந் தன்னையவனுடைய சொத்தென்றும் நினைத்து அத்தாமெம் சொத்தானநம்மை ஸ்வாமியான அவனிஷ்டப்படிசெய்துகொள்ளக்கடவனென்று நினைத்திருக்குமவர்கள்-இவ்வர்த்தத்தைஆழ்வார்(களைவாய் துன்பங்களையாமொழிவாய்களை கண்மற்றிலேன்)என்றுளன் துன்பங்களைப்போக்குவீர்போக் காமல்நரகத்தில்தள்ளுவீர்எனக்க கதிலொரு அன்வயமில்லைசொத்து நஷ்டமடைந்தால் அத்தையுடைய ஸ்வாமிக்குநஷ்டமொழியசொத்துக்கு நிமித்தியமில்லை என்று மெளிந்திருக்க வேணுமென்றும்(செய்தவை யெ

பூநாற்றுப்போலவன்செய்வனசெய்து கொள்ள) வென்றுசெப்யென்றகழனியில் பிடுங்கப்பட்டநா ற்றைஅத்தைஉடையவன் எந்தகழனியில்எறிவனே எறிந்துநடுவனே அப்படி நம்மைசெய்துகொள்ள க்கடவன்என்றும்,பிரபன்னகாயத்திரியான நூற்ற ந்தாதியில் (இடு மெயினியசுவர்க்கத்திலின்னநரகி லிட்டுச்சுடுமெயவற்றைத் தொடர்தருதொல்லைச்சு ழல்பிறப்பில் நடுமெயினிநம்பி ராமானுசன் நம் மைநம்வசத்தே விடுமே சரணமென்றால் மனமே நையல்மெவுதர்க்கே (என்று ஒய்மனசேஎம்பெரு மானர் நம்மைசுவர்க்கத்திலிட்டும்இன்னமும்நர கத்திலிட்டுசுட்டும்அவ்விரண்டையுந் தொடரும்ப டியானசுழல்பிறப்பில் நம்மைஸ்தாபிக்கட்டும்-அ ன்றியில் சம்ஸாரிகளைப்போலேகர்மத்தைத்தலையி லேறிட்டு நம்மைநம்முடையவசத்தில்விட்டுவிடட் டும் அவரைசரணமென்றபின்பு அவரையடைவத ற்குறையாதே என்றருளிச்செய்தபடியாலும் - இ யானஸாரத்தில் (உடமைநானென்று முடையானு யிரை.வடமதுரைவந்துதித்தானென் றுந் - திடமா க - வறிந்தவன்றன்றாளிலடைந்த தர்ப்பினுண் டோ - பிறந்துபடும்நீள்துயரம்பின - என்றுதன் ஊசுவரனுடைய உடமைஎன்றும் இந்தவுயிரையு டையவன் இத்தைப்பெறுகைக்காக வடமதுரையி லே கண்ணனுப்வந் தவதரித்தானெனறுந் திடமா க அறிந்துஅவனுடையதிருவடிகளில் அடைந்தபி ன்புபிறந்து படப்பட்ட துக்கமுண்டோவென்றும். அருளிச்செய்தபடியே தென்னாசாரியர்கள் திரு

மந்திரத்தில்பிரணவத்தில் சொன்ன சேஷத்துவகி
யானத்தையும்-நமப்பதத்தில் சொன்ன பாரதந்தி
ரியகியானத்தையுமுடையராய் ஈசுவரனுடைய அரு
ளையேயெதிர்பார்த்துக்கொண்டிருப்பர்கள். இப்
படிப்பட்டவர்களை (சோம்பரையுகத்திபோலுஞ்சூ
ழ்புனல்ரங்கத்தானே) என்றுதொண்டரடிப்பொ
டியாழ்வார் அருளிச்செய்தபடியே ஈசுவரன் உகந்த
ருளி - மாசுச: - என்பதில்பயப்படாதே என்
று அர்ச்சுனனுக்குச்சொன்னபடியேயும் - அபயம்
ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம - என்றொ
ருக்கால்சரணாகதி பண்ணினவர்கள் எப்படிப்பட்
டநீசராயிருந்தபோதிலும் நான்அவர்களுக்கு அ
பயங்கொடுக்கிறேன் அது என்னுடையவிரதம்என்
றருளிச்செய்தபடியேயும் அவனுடைய அபயப்பி
ரதானத்தைப்பெற்றிருப்பர்கள் - வடஆரியர்கள்
திருமந்திரத்தில் சொன்ன சேஷத்துவ பாரதந்தி
ரயத்துக்குவிரோதமாய் சுதந்திரக்கியானத்தையு
டையராய்தாங்கள் தங்களுடைய ஸ்வபத்தினத்தா
லெஅடைகிறோமென்றும் தாங்கள்செய்தபாபத்
துக்குத்தாங்களே பிராயச்சித்தம் பண்ணிக்கொ
ண்டுபாபங்களைப்போக்கிக் கொள்ளுகிறோமென்
றும்நினைத்துபாபத்தைபோக்கிக்கொள்ளாமலும்
ஸ்வயத்தனத்தால் அடையமாட்டாமலும் ஆத்மா
அபஹாரம்பண்ணுகிற பிரபல்பாபத்தைமாத்தி
ரம்அடையப்படுவர்கள்.

(சஉ) ஆசாரிய அபிமானமாவது - మాతృదే
వోభవ - పితృదేవోభవ - ఆచార్యదేవోభవ -
என்னுஞ் சுருதியில் அன்னையும் பிதாவுந் தெய்வ
மென்றதில் ஆசாரியனைத்தெய்வமென்று நினைக்
கவேண்டுமென்றும் - பின்னும் - గురురేవపరం
బ్రహ్మ - గురురేవ పరాయణః - గురురేవ
పరఃకామ - గురురేవపరంధనం - గురురేవపరాగతిః -
என்பதில்குருவையேபரப்பிரம்மமாகநினைக்கவே
ண்டுமென்றும் - குருவையே பாராயணம்பண்ண
வேண்டுமென்றும் குருவையே மிகவும் பக்திபண்
ணவேண்டுமென்றும் குருவையே பரமமானதன
மாகநினைக்கவேண்டுமென்றும் - குருவையேமோ
க்ஷத்துக்குபாயமாக நினைக்கவேண்டு மென்றுஞ்
சொல்லியிருக்கின்றது - இப்படி நினையாதவர்களை
க்குறித்துப் புராணத்தில் - విష్ణోరర్చావతారేషు -
లోహభావంకరోతియః - యోగురౌమానుషంభావం
ఉభౌనిరయపాతినౌ - என்னுஞ்சுலோகத்தின் அர்த்
தத்தைக்கியானஸாரத்தில் (மானிடவனென்றுங் கு
ருவை மலர்மகள்கோன் - தானுகந்தகோலமுலோ
கென்றும் - ஈனமதாய் - எண்ணுகின்றநீசரிருவரு
மேயெக்காலும் - நண்ணிடுவர்கீழாநரகு) இதன்
பொருள் விஷ்ணுவின் அர்ச்சாவதாரமான திவ்வி
யமங்களவிக்கிரஹத்தில் பஞ்சலோஹமென்றபி

ரதிபத்தியுங் குருவிடத்தில் மனுஷியப் பிரதிபத்தியும் பண்ணுகிற இருவருமே எக்காலுங் கீழாநரகத்தை யடைவர்களென்றும் - (என்றுமனைத்துயிர்க்குமீரஞ்செய்நாரணனும் - அன்றுந்தன்னாரியன்பாலன்பொழியில் - நின்ற - புனல்பிரிந்தபங்கயத்தைப்பொங்குசுடர்வெய்யோன்- அனலுமிழ்ந்துதானுலர்த்தியற்று) இதன்பொருள் சமஸ்தாத்மாக்களுக்குங் கிருபைசெய்யப்பட்ட நாராயணனும்எவன்தன் ஆசாரியனிடத்தில் மனுஷியப்பிரதிபத்திபண்ணுகிறானோ அவனைத்(தாமரையையலர்த்தத்தக்கஆதித்தன்தானே நீரைப்பிரிந்தால் அத்தையுலர்த்து மாப்போலெ ஆசாரியனை மனுஷியனென்று நினைத்தவனைவாடப்பண்ணு)மென்றுலோகாசாரியரும் அருளிச்செய்தபடியால் தென்னாசாரியர்கள் ஆசாரியனைத்தெய்வமென்றும்அவர்அபிமானத்தாலெ பேறென்றும் நினைத்திருப்பர்கள் - மற்றவர்கள் ஸ்வயத்தனத்தா லடையப்பட்டவர்களாகையால் அவர்களுக்கு ஆசாரியாபிமானத்தால்பேறென்றிருக்கவேண்டிய நிமித்தமில்லை.

(சரு) ஆசாரியபூர்த்தியுள்ள தளம்பெருமானாருக்கேயாகையால் இவ்வர்த்தத்தைத்திருவரங்கத்தமுதனார்பிறபன்னகாயத்திரியில் (இராமானுசன்புகழோதுநல்லோர்மறையினைக்காத்திந்தமண்ணகத்தேமன்னவைப்பவரொ)இதன்பொருள் இராமானுசனுடையபுகழையோதும் பெரியவர்கள் வேதத்தைக்காத்து அதைப்பூமியில்பிரதிஷ்டைபண்ணினவர்களாவர்களென்றும்- (சீர்கொண்டுபேரறஞ்செ

ய்த்துநல்வீடுசெறிதுமென்னும் பார்கொண்ட மே
ன்மையர் கூட்டனல்லேனுன் பதயுகமாம் - ஏர்
கொண்டவீட்டையெளிதினிலெய்துவனுன்னுடை
ய - கார்கொண்டவண்மை யிராமானுச விதுகண்
டுகொள்ளே-) என்றும்அருளிச்செய்தார்.சீர்கொ
ண்டு என்பதன்பொருள் 'பரபக்தியாவது பகவானை
த்தரிசிக்கவேணுமென்பது . பரக்கியானமாவது
அவனுடனேகூடி யனுபவிக்க விச்சிப்பது - பர
மபக்தியாவது கூடியனுபவிக்குங்கலவியில்பிரிவு
வரப்போகிறதென்றுபயப்படுதல்' இம்மூன்றுவித
பக்திகளைச் சீர் என்பது- கொண்டுஎன்பது-இப்ப
டிப்பட்டபக்தியைக்கொண்டு-பேரறம்-பெரியதப
சு - அதாவது முன்னே சுருதியில்பிர பத்தியென்
னப்பட்ட தபசைச் சிலாக்கியமென்று சொன்ன
அந்தப்பிரபத்தியைச்செய்து மோக்ஷத்தைஅடை
யவேணு மென்றவர்களுடைய கூட்டத்தில் நான்
சேர்ந்தவனன்று - பின்னையெந்த நிஷ்டையில் சே
ர்ந்தவனென்றால் தேவரீருடையஇரண்டு திருவடி
களாகிறஅழகியவீடான மோக்ஷத்தை மேகத்துக்
குச்சமானமான உம்முடையஅவுதாரியத்தினாலெ
எளிதாகஅடைவேன் இதுகண்டுகொள்ளும்என்று
அருளிச்செய்தபடியே மதனுசாரியர்கள்எம்பெ
ருமானார்சம்மந்தத்தாலெ பேறென்றிருப்பார்கள்.
மற்றவர்கள்பிரபத்தி நிஷ்டைக்கே சாதனபுத்தியா
லே மிகவுந்தூரமாயிருப்பதினால்இந்தப்பஞ்சமோ
பாயநிஷ்டைக்கு எவ்வளவுதூரத்திலிருக்கின்றார்
களோ கல்விமான்களுக்கு விசிதமாகும்.

(சச) ஸ்ரீபதரிகாச்சிரமத்தில் ஈசுவரன் நரனும் நா
ராயணனும் அவதரித்து சிஷ்ய ஆசாரியக்கிரமத்
தைவெளிப்படுத்தினதுபோல் இவ்வர்த்தத்தைவெ
ளிப்படுத்துவதற்கு அந்த உடையவரே மணவாளமா
முனிகளாய் அவதரித்தனதிந்திரரான் எம்பெருமா
னாரிடத்தில் பக்தியுடையவரென்று தெரியும்படியாய்
எதிந்திரப்பிரவணர் என்கிற திருநாமத்தையும் வகித்
தார். இதற்குப்பிரமாணம் பிரமாண்டபுராணத்தில்
பதரிகாச்சிரம் மஹாத்மியத்தில் நர நாராயண சம்
வாதத்தில்- సన్నియోగాత్ భూతపుర్యాం-మహీనామీ
శ్వరః కలౌ - శ్రీ రామానుజరూపేణ - జనిష్యతిస
తాంముదే - என்னுஞ் சுலோகத்தில் என்னுடைய
நியோகத்தால் ஸ்ரீபெரும்பூதூரில் ஸர்ப்பங்களுக்
குராஜனான சேஷன் கலியுகத்தில் ஸ்ரீராமாநுஜரெ
ன்றரூபத்தாலே சாதுக்களைச் சந்தோஷிப்பிக்க
அவதரிக்கப்போகின்றானென்றும் - విశిష్టాద్వైత
సిద్ధాంత - ప్రతిపాదనతత్పరాః - తదాశ్రయాస్స
దాచారాః - సాత్త్వికాస్తత్త్వదర్శినః - వేదాంతద్వ
యతత్త్వజ్ఞాః - భవిష్యంతిగురూత్తమాః - తథాతద్విష
యేస్సర్వై - దేశికైరాదృతో మహాన్ - என்னு
ஞ்சுலோகத்தில் விசிட்டாத்வைத சித்தாந்தம் ப
ண்ணப்பட்டவர்களவதரிக்கப் போகின்றார்களெ
ன்றும் - ప్రపన్న సావిత్రీవక్తా - రంగనామే

తివిశ్రుతః - అష్టోత్తర శతాఖ్యానాం - గా
థానాం దివ్యానాం కరిష్యతి - என்னும் பிரபன்ன காய
த்திரியைச் சொல்லப்பட்டவராய் திருவரங்கத்த
முதனார் என்கிற நாமதேயத்தை யுடையவர் நூ
ற்றெட்டுப் பாசுரமான திவ்வியமான காதைகளை
ச்செய்யப்போகின்றாரென்றும் - ఆవిర్భూతశ్చ తా
రాణి ప్రముఖై రాదిపుంగవైః నిర్మితానాం ప్రబం
ధానాం - చూడారత్నం భవిష్యతి- என்னுஞ் சுலோ
கத்தில் அவதரித்திருக்கின்ற சடகோபர்.பொய்கை.
பூதம். பேயார்.முதலான ஆழ்வார்களாலெ நிர்மித
மீ பண்ணப்பட்டிருக்கின்ற பிரபந்தங்களைப்பார்
க்கிலுஞ் சூடாரத்தினமான பிரபன்னகாயத்திரி
என்கிற நூற்றந்தாதியுண்டாகப்போகிறதென்றும்-
పునశ్చ విభవే శ్రీమాన్ - మన్నియోగాన్మహీ
తలే - జనిష్యతి శ్రీనగర్యాం - యతీంద్ర ప్రవణాత్మ
కః - என்னுஞ்சுலோகத்தில் அந்த ஸ்ரீமத்தான ரா
மாநுஜரானவர் என்னுடைய நியோகத்தினாலே பூ
மியில் திருநகரியிலெ எதிந்திரரிடத்திலெ பிரவ
ணமானவரா யவதரிக்கப்போகின்றா ரென்றும் -
యత్పద్యం ద్రామిడామ్నాయ-స్యారంభాంతే భవిష్య
తి - సపవసౌమ్య జామాతా - యతిశ్రేష్ఠో భవిష్యతి.
என்னுஞ்சுலோகத்தில் யாருடைய பத்தியமான து

திரவிடவேதத்தின் ஆரம்பத்திலும் அந்தியத்தி
லும் உண்டாகப்போகின்றதோ அந்தப்பத்தியத்
தில் சொல்லப்பட்டவர் மணவாளமாமுனிகளென்
கிற எதிசிரேஷ்டர் அவதரிக்கப்போகின்றாரென்
றுஞ் சொல்லியிருக்கின்றது - பின்னும் ஸ்ரீபாஞ்
சராத்திரத்தில்விஷ்ணுரகசியத்தில் பக்தர்களுடை
ய ஸ்வரூபத்தைச் சொல்லுகிற பிரகரணத்தில்—

శంఖశ్చక్రం గదాపద్మం శార్ఙ్గం సేనాధిప స్తథా -
శేషోలక్ష్మీర్యోగినశ్చ సనకాద్యా మహాజనః -
నీచయోనిషు సంజాతాః - என்னுஞ் சுலோகத்தில் -
சங்கஞ் - சங்கரங் - கதை - பதுமம் - சார்ஙகம் -
சேனைமுதலியார் - சேஷன் - லக்ஷ்மி - முதலான
வர்கள் நீசயோனிகளிலே அவதரிக்கப் போகின்று
ர்களென்றுசொன்னபிரகரணத்தில் - శేషాత్మానం
పరవరం - విజానియ్యాన్ను నింగురుం - విష్వక్సేనాత్మ
నాజాతం - శఠకోపమునీశ్వరం - என்னுஞ்சுலோக
த்திலும்சேஷன் வரவரமுனிகளென்றகுருவானம
ணவாளமாமுனிகளாயும்விஷ்வக்சேனர்சடகோப
முனீசுரராயு மவதரிக்கப்போகின்றதாயும் - ఘం
తాత్మానాసముజ్జాతం - నిగమాంతగురుంబుధం - என்
னுஞ் சுலோகத்தில் வேதாந்ததேசிகர் கண்டாவ
தாரமென்றுஞ் சொல்லியிருக்கின்றது - வரவரமு
னிகளென்றதற்கு அர்த்தம் வராள் என்று நித்திய

ஸூரிகளுக்குப்பேர் - வரவரர்என்றது அவர்களுக்குத் தலைவனானசேஷியைச்சொல்லுகையால் வரவரமுனிகளென்று ரூடியாய் வழங்குகின்றது - இவர் ஆதிசேஷனென்று பகவான் ஸ்ரீபாஞ்சராத்திரத்திலும்புராணத்திலுஞ்சொல்லியிருப்பதைமஹாவித்வான்களாய் மஹத்துக்குப் பிரசூதாளானகந்தாடைஆசாரியபுருஷர்களாய் முன்உடையவர்ஏர்ப்படுத்தினஎழுபத்துநான்குசிம்மாஸனபதிகளுடையவம்சஸ்தர்களாலே ஸ்துத்யம்பண்ணி இவர்திருவடிகளில் ஆஸ்ரயித்துபேறுபெற்று இன்னமும்பிறபட்டவர்களுமிவர்திருவடிகளை யாஸ்ரயித்துஉஜ்ஜீவிக்கும்படி உபதேசித்த வைகளையுந் தெரிவிக்கிறோம்-பரவாதிகேசரிபதினான்குபாட்டாய்பணித்தஸ்ரீசைலவைபவத்தில்ஐந்தாவதுபாசுரத்தில் (மணவாளமாமுனிதாண் மருவியபேர்வாழ்ந்திடுவார். குணமாகக்கொண்டினிதைக்கூறுகேள்வாதியரே -பணவாளரவர்கும்பகைத்தாரோபிழைப்பதில்லை.மணமுடையமந்திரமாமதிக்கண்டீர்தனியனையே)என்றும் (அற்பிசியில்திருமூலத்தவதரித்தான வாழியே- யரவரசப் பெருஞ்சோதியனந்தனென்னும் வாழியே)என்றுவாழித்திருநாமத்திலும் - (பணவாதிசேடனருள்பரனேவவதரித்த மணவாளமாமுனிவன் மலரடியை யடைநெஞ்சே)என்பதுபோல் அனேகர்அனேகங்கிரந்தங்களில்இவர் சேஷனென்றுசொல்லியிருக்கின்றார்கள் - இவர்தனியனைப்பிரபந்தாரம்பத்தில் சொல்லும்படி பிரமாண்டபுராணத்தில்சொல்லி யிருக்கின்றபிரகாரம் ஸ்ரீரங்கநாதன்

அருளிச்செய்ததாய் - எறும்பி அப்பாவென்பவர் வரவரமுனிசதகத்தில்- వేదాదౌ పూర్వముక్త్వా హ రిరితి సుజ నోవక్తిపశ్చాద్యధోమిత్యే వంవక్తవ్యంయే తద్వ కుళధరవచోను శ్ర వారంభకాలె-శ్రీశై లె శేతి పద్యం ప్ర ధమమధసదాసంప్రదాయైకనిష్ఠైః- లక్ష్మీనాథేతిచేతిస్వయమిహభగవానా ప్ర శాంద్రం గనాథః - என்னுஞ்சுலோகத்தில்வேதத்தின் ஆதியி லும்அந்தத்திலும்முதலில்ஹரிః என்றுசொல்லிப் பின்பு ஓம்என்றுசொல்வதுபோல்வகுளதராகிய நம்மாழ்வாராலே ஸ்ரீமந்நாதமுனிகளுக்குஅருளி ச்செய்தநாலாயிரந் திராவிடவேதத்தின் ஆதியில் ஸ்ரீசைலேசதனியனையும் பின்பு லக்ஷ்மீநாததனிய னையும், உச்சரிக்கும்படி பகவான் ரங்கநாதனருளி ச்செய்ததாய்ச்சொல்லியிருக்கின்றார்-இப்படியே முன்சொன்ன பரவாதிகேஸரி மூன்றாம்பாட்டில்- (பட்டர்பிரான்முதலான பதின்மர்கலை யோதையி லுந்-திட்டமாய்த்தினந்தோறுந்திருமணிமேனை யிலுங் - கட்டுமுட்டாயுண்பதற்குக்கையதனீரேற் கையிலும் -அட்டதிக்கும்விளங்குரைத்தாராரியர்க ளனைவருமே)- இப்படிதென்னாசாரியர்களும் வட வாரியர்களுக்குக் கூடஸ்தரான ஆதிவண்சடகோப ஜீயரும் அவருடையமடஸ்தரான அகோபிலமடத் தாரும்சுருதியில్ఆదావంతేయతోజ్ఞానం-తంపూర్వ

మణి వాదయేత్ - என்பதில் ஆதியிலும் அந்தத்திலும்

யாராலே இயானமூண்டாக்கப்பட்டிருக்கின்றதோ அந்த ஆசாரியனை முன்னே சேவிக்கக்கடவன் என்றபிரமாணத்தின்படியே உபயகலையாரும் பிரபந்தாரம்பத்தில் உச்சரித்தும் மற்றுந் திருமணிடும் வேளையிலும் அமுதுசெய்கிறதற்குக்கைகளில் நீர் ஏற்கையிலும் உச்சரித்துக்கொண்டு வருகிறார்கள்- அகோபிலம்மடத்தார்க்கு இந்தத்தனியன்வந்தவரலாறு அகோபிலம்மடத்துக்குமூலபுருஷரான ஆதிவண் சடகோபஜீயர் மணவாளமாமுனிகளுடைய சிஷியராய் அவரிடத்தில் பகவத்விஷயஞ் சேவித்தபடியால் அந்தப்பரமாசாரியனுடைய தனியனை அகோபிலம் மடத்தில் அனுசந்தித்துக் கொண்டு வருகிறார்கள் - இப்படி இருக்க இப்போது அந்தப் பரமாசாரியனுடைய மந்திரமான தனியனையும் அவர்சம்மந்தத்தையும் வேண்டாமென்று விட்டுவிட்டவர்களுக்குபலம் - గురు

త్యాగి భ జేన్మృత్యుః - మంత్ర త్యాగిదరిద్రతాం.
గురుమంత్ర పరిత్యాగి - రౌరవన్నరకం వ్రజేత్ -

என்னுஞ் சுலோகத்தில் குருவைத்தியாச்சியம்பண்ணவன் எமனையடைகிறான் - மந்திரத்தைத்தியாச்சியம்பண்ணவன் பரலோகமில்லாத தரித்திரத்தையடைகிறான்-ஆகியவிரண்டாலும் குருவையும்மந்திரத்தையும்விட்டவன் ரௌரவநரகத்தையடைகிறான் என்றுசொல்லியிருக்கின்றது - ஸ்ரீபாஞ்சரா

த்திர[redacted] - విష్ణుం ద్రవిడవేదంవా - స్వశాఖాంవా గురోత్తమం - యోనిందతిసదుర్మేధ - నరకస్థో నరాధమః - என்று விஷ்ணுவையுந் திரவிடவேதத்தையும் ஸ்வசாகையான தங்கள் தங்கள் சாகைகளையும் உத்தமகுருவையும் நிந்திக்கிறவர்கள் மூடாளென்றும் - நரகத்தில்வசிக்குமவர்களென்றும் - நரஅதமர்கள் என்றுஞ்சொல்லியிருக்கின்றது - மணவாளமாமுனிகள் உபயகலையாரில் தென்கலையாருக்கும் அஹோபிலம்மடத்தாருக்கும் வேறுமாதலால் பரமாசாரியராயிருக்கட்டும் - மற்றவர்களுக்கும் அவர்குருவாவரோவென்னில் முன்சொன்னபாஞ்சராத்திரத்தில் சேஷன் வரவரமுனிகள்என்ற குருவென்றதில் பரமபதத்தில் கருட விஷ்வக்சேனாதிகளுக்கு குருவாகிறபோது இந்த விபூதியிலுள்ளவர்க்கு குருவாகமாட்டாரோ - இதன்றி பிரம்மாண்டபுராணத்தில் அந்தராமாநுஜர் மறுபடியும் எதிந்திரப்பிரவணராயவதரிக்கப்போகிறாரென்றுஞ்சொல்லுகையால் சேஷன்உடையவாராயவதரித்ததில் ஸம்சயமில்லாததுபோல அவர் மணவாளமாமுனிகளாயவதரித்ததில் சம்சயமில்லாமல் பிரமாணங்களும் பூருவாசாரியர்களும் ஏககண்டமாயருளிச்செய்கையால் இதராளும்அவரைலோககுருவென்பதில்ஸம்சயிக்க வேண்டுவதில்லை. இன்னமும் பாரதவசனத்திலும் அவரை நிந்தித்தவர்கள் சாசுவிதமான க்ஷேமத்தையடையார்களென்றுசொல்லப்படும் - எப்படிஎன்னில் கண்ணன்-

జ్ఞానీత్వాత్మైవ మేమతం - என்றுகியானி என்னுடைய ஆத்மாவென்றும் அது என்னுடையமதம் என்றுஞ்சொன்னபடியால் உயிரை நலிந்தால் உடலுக்குநோவும் - பின்னும் - పాండవాన్ ద్విషసే రాజన్ మమ ప్రాణాహిపాండవాః - என்றுகண்ணன் தூதுசென்றபோது துரியன் பீஷ்மாதிகளையும் என்னையும்விட்டு விதுரான்கிருஹத்தில் அமுதுசெய்ததென்னென்றுகேழ்க்க - பாண்டவர்களுக்குநீ த்வேஷின்ன, பாண்டவர்களுக்கு நான்விரோதியாகிலுனக்கென்னவென்ன - அவர்களெனக்கு பிராணனென்றுசொன்னகிரமத்தாலும் இவரைநிந்தித்தால்விஷ்ணுவை நிந்தித்தவர்களென்று முன்சொன்னபிரமாணசித்தம்- இதன்றியில் திருக்குறுங்குடிநம்பி உடையவரைசிம்மாஸனத்தில்இருத்தித்வயமென்ற மந்திரங்கேட்டதுபோல்ஸ்ரீரங்கநாதன் இவரைசிம்மாஸனத்திலிருத்தி திருவாய்மொழிப் பொருளைக் கேட்டதாய் பரவாதிகேசரி அருளிச்செய்தமுதல் பாட்டில் (கூறுகேனுலகோரே குங்குமதோளரங்கேசர் - மாறன்மறைப்பொருள்கேட்க மணவாள மாமுனியை - யேறுமணைதனிலிருத்தி யிருநிலத்திற்றுமிருந்து வீறுடனேசெவிசாத்திவிரைமலர்த்தாளிணைபோற்றி)- என்று அருளிச்செய்திருக்கிற படியே - மணவாளமாமுனிகளும்-(நாமார்பெரிய திருமண்டபமார் நம்பெருமாள் - தாமாகவந்து தனித்தழைத்து - நீமாறன் - செந்தமிழ்வேத

த்தின் செழும்பொருளை நாடோறும் - வந்து ரையென்னுவதே வாய்ந்து - ) என்று தம்மைப் பெரியபெருமாள் திருவாய்மொழிப் பொருளை விண்ணப்பஞ்செய்ய நியமித்ததா யருளிச் செய்தபடியால் தனக்கு குருவென்ற காரணத்தி னாலும் மணவாளமாமுனிகளை நிந்தித்தவர்களுக்கு ஈசுவரனுடைய நிக்கிறஹ முண்டாகுமென்று கல் விமான்கள் கண்டுகொள்வர்கள்.சேஷாவதாரமாந எதிராஜர் தாமேமணவாள மாமுனிகளாய் அவதரித்தார் என்று ஸ்ரீபாஞ்சராத்திர புராணங்க ளில் சொல்லியிருக்கின்றத்தை பரவாதிகேஸரி அழகியமணவாளஜீயர் முதலான மஹாவித்வான்களானபூறுவாசரியர்கள் அருளிச்செய்தவைகளுஞ் சேஷாவதாரமாய் சேர்வைசாதித்தவைகளுஞ் சிலது தெரிவிக்கிறோம் - எம்பெருமானருக்கு விஷமிட்டதுபோல வாதிகள் இவருடையமடத்தில் நெருப்பையிட்டபோது இவர் சேஷாவதாரமாய் வெளியில்வந்து சேர்வைசாதித்தருளினர் - ஸ்ரீரங்கத்தில் உத்தமநம்பிஎன்ற ஸ்தானீகர்இவரைஇகழ்ச்சியாய் நினைத்தபோது ஸ்ரீரங்கநாதன் அவர்சொப்பனத்தில்தம்முடையசேஷனைத்தொட்டுக்காட்டிஇவர்அவரீஎன்றுஅருளிச்செய்தபின்புஅவர்இவரிடத்தில்வந்து அபசாரக்ஷாமனம்பண்ணிக்கொண்டார்அப்போது அவருக்குசேஷாவதாரமாய்சேர்வைசாதித்ததுபிரசித்தம்.எறும்பிஅப்பாவென்றகந்தாடை ஸ்வாமிவித்வகெர்வத்தால் இவரைஸாமான்யஎதிஎன்றுநிதிளிகைப்பிரஸாதங்கொள்ளேனமென்றும் இகழ்ச்சி

பண்ணிபோனபோது அவருக்குதிருவாராதனமா னபெருமாள்திருக்காப்பைத்திறக்காமலிருக்கத்தி ருவாராதன மில்லாமைபால்பட்டனியிருந்து நித்தி ரிக்கையில் அவர் சொப்பனத்திலும் முன்சொன் னபடியேசொன்னார் அதர்க்குதிருஷ்டாந்தம் அவ ர் இவர்விஷயமா யருளிச்செய்த வரவரமுனிசதக த்தால் விசிதமாகும். கந்தாடை அண்ணனும் அவர் மஹாத்மியம் அறியாமல்அபசாரப்பட்டதின்பே ரில்உடையவரும் முதலியாண்டானும் அவர்சொப் பனத்தில் வந்து கையால்அடித்துஉடையவரைக் காட்டி இவராக்கும்மணவாளமாமுனிகளா யவத ரித்தாரென்று சொல்லிஅவர்திருவடிகளை யாஶ்ரு யிக்கச்சொல்லி நியமித்தருளினார் அப்படியே அ வர் ஆஶ்ருயித்தார் அதுவேதிஷ்டாந்தம். பிரதிவா தி பயங்கரம் அண்ணனும் வித்வகெர்வத்தால் இவ ரைப் பரிக்ஷபண்ணும்படி மடத்துக்கு வந்த போது(ஒன்றுந் தேவு)என்ற திருவாய்மொழிக்கு வியாக்கியானமாய் நேரிட்டபடியால் ஒரு மத யானை கருப்பந் தோட்டத்தில் பிரவேசித்தது போல் இவர் வேதசாகைகளில் சஞ்சரித்து பரத் துவஸ்தாபனமான வாக்கியங்களைப்பிரயோகம்ப ண்ணினபடியைக்கண்டு வேரற்றமரம்போலெதெ ண்டனிட்டுத்திருவடிகளில் ஆஶ்ருயித்தார் - இன்ன மும்இவர் பிரபாவங்கள்எதிந்திரப் பிரவணபிரபா வமென்கிற கிரந்தத்தில்ஸ்ரீமது.உபய.பிள்ளை லோ கமஸ்வாமிகள் விஸ்தாரமாயருளிச்செய் திருக்கிறத் தில்கண்டுகொள்ளலாம்.தென்னாசாரியர்கள்இவர்தி

ருவடிகளில் ஆஶ்ரயித்து "சுருதியில் ಗುರು ದೇವಪರಾ ಗತಿಃ - என்றவசனத்தில் குருவின்பாதமே மோக்ஷத்துக் குபாயமென்று சொன்ன வர்த்தத்தை எதிராஜவிம்சதி என்ற கிரந்தத்தில் - ಶ್ರೀಮಾನ್ ಯತೀಂದ್ರ ಭವದಿವ್ಯಪದಾಬ್ಜಸೇವಾಂ - ಶ್ರೀಶೈಲನಾಥಕರು ಣಾಪರಿಣಾಮದತ್ತಾಂ - ತಾಮನ್ವಹಂಮಮವಿವರ್ಧಯ ನಾಥತಸ್ಯ - ಕಾಮಂವಿರುದ್ಧಮಖಿಲಂಚನಿವರ್ತಯತ್ವಂ- என்னுஞ்சுலோகத்தில் ஸ்ரீமத்தானஎதிந்திரரேதேவர் திருவடித்தாமரைகளில் தாஸியத்தை ஸ்ரீசைலநாதராகிய என் ஆசாரியருடைய கிருபையின்பக்குவத்தினாலெ உபதேசிக்கப்பட்டிருக்கின்றஅப்பேற்றை அடியேனுக்கு நித்தியமாய்விருத்தியடையும்படிசெய்து அதற்க்குப்புறம்பானகாமங்களை நிவர்த்திப்பிக்கவேணுமென்று தாம்அனுஷ்டித்ததுமல்லாமல் பரோபதேசத்தில்(நந்தாநரகத்தழுந்தாமைவேண்டி டினுனிலத்திர் எந்தாதையானவெதிராசனை நண்ணுமென்றுமவன் அந்தாதிதன்னையனுசந்தியுமவன்ரெண்டருடன் சிந்தர்குலங்கெடச்சேர்ந்திருமுத்தியின்சித்திக்குமே)என்றும்அருளிச்செய்தபடியே" எம்பெருமானாதத்தஞ்சமென்று நினைத்துபெரியபெருமாளுடையஅனுக்கிறஹத்துக்குயிலக்காயிருப்பார்கள். மற்றவர்கள்இவரை நிந்தித்துஅத்தாலெஉடையவர் நிக்கிரஹத்தைப்பெற்றுபெரியபெருமாளுடைய நிக்கிறஹத்துக்கும்இலக்காயிருப்பர்கள்-இதில்அவன் அந்தாதிதன்னைய

னுசந்தியுமென்றதற்குப்பிரமாணம்அதுலஎம்பெரு
மானுருடைய கலியாணகுணங்களைப்பிரதிபாதித்தி
ருக்கையால்சுருதியில்- ஸ்வாத்யாயந: -என்ப
தில்குருவையே பாராயணம்பண்ணக்கடவன் என்
றதையும் அவன்தொண்டருடன்கிந்தாகுலங்கெட
ச்சேர்ந்திருமுத்தியின் சித்திக்குமென்றதற்குப்பிர
மாணம்சுருதியில் - ஸங்கா ப்ரஹ்மமயம் - எ
ன்பதில்பாகவதர்கள் கொடுக்கிருத்தவிறே நித்தி
யசூரிகளுடைய ஓலகத்திலிருப்பது என்றதையுந்
திருவுள்ளம் பற்றியருளிச்செய்தார் - குலசேகரா
ழ்வார்(தொண்டரடிப்பொடியாடநாம்பெறில்கங்
கைநீர்குடைந்தாடும் வேட்க்கை யென்னுவதே)எ
ன் றுபாகவதர்களுடைய ஸ்ரீபாதரேணுஎன்சிரசில்
தரிக்கப்பெற்றால் கங்கைமுதலிய புண்ணியதீர்த்த
ங்களில்படிவதினால் என்னபிரயோஜனமென்றுஅ
ருளிச்செய்தபடியால் எம்பெருமானுருடைய அ
டியார்களுடனே சிந்தையிலுள்ளவியாகுலங்கெடு
ம்படி சேர்ந்திருந்தால் முத்தியின்சித்திக்குமென்
றருளிச்செய்தபிரகாரம் எம்பெருமானையும் அ
வருடையஅடியாரையும் ஆச்ரயித்து(மறையினைக்
காத்திந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே)என்ற
ருளிச்செய்தபடியே வேதத்தைக்காப்பாற்றிஅத்
தை பூமியில் பிரதிஷ்டைபண்ணினவர்களாய் ஆழ்
வார்(இப்பிறப்பேசிலநாளிலெய்தினன்யான்)என்
பதில் இத்தச்சன்மமுழுதும்வேண்டியிராமல்சில
நாளிலேயேதிருவடிகளையடைந்தவர்களான தன்

மையரா யிருப்பர்கள் - மற்றவர்கள் கருமங்களை யும் அனுட்டித்துத் தலைக்கட்டிக்கொள்ளமாட்டா மலும்பிரபத்தியில்சாதனபுத்திவிடாமலும்ஆசாரி யாபிமான நிஷ்டர்என்கிற சம்பிரதாயத்தைக்கேட் டறியாதவர்களாயும்அத்துடனிராதே அவர்களை நி ந்தித்தவர்களாயும்அதனுலெமடித்தப்பிடவைவெந் தால்உண்டையும்பாகும் ஒத்திருந்துகாற்றடித்தவா றேபரந்துபோமாப்போல வைஷ்ணவஹானியை யுடையராயிருப்பர்கள் - வடவாரியர்கள்திருவாய் மொழியில் (பாடும்பெரும்புகழ் நான்மறைவேள் வியைந்தாறங்கம் பண்ணினர் வாழ்யென்றும்.திரு மொழியில் துஞ்சாநீர் வளஞ்சுரக்கும் பெண்ணை த்தென்பால்தூய நான்மறையாளர் சோமிசசெய் ய)வென்றுஞ்சொன்னதுபோல் சிலவசனங்களைத் தாங்கள் கருமங்கள்செய்வதற்குப்பிரமாணமாகக் கருதியிருக்கிறார்கள் - அதற்குப்பரிஹாரம்-நூ- வது பக்கத்தில் வேதபுருஷனுடைய கருத்தைச் சொன்ன விடத்தில் கண்டுகொள்ளலாம் - அப் படியே கண்ணன் கீழ்ப்பதினெட்டு அத்தியாய ங்களில் கருமகியான பக்தியோகங்களை விதித்து ப்பின்பு பிரபத்திநிஷ்டையைவிதித்தான்- அந்தப் பிரகாரம்-కృతేయుగే త్రిసూనుస్స్యా- త్రేతాయాం రఘునందనః- ద్వాపరేనందసూనుస్స్య - కలౌ దేవఃప రాంకుశః -என்பதில்கண்ணன்கலியுகத்தில் ஸ்ரீபரா ங்குசராயவதரித்து(வணக்குடைத்தவனெறி வழிநி ன்றுபுறநெறிகளைகட்டுணக்குமின்பசையறவ்வனு

டை யுணர்வுகொண்டுணர்ந்தே )என்றுஅருளிச்செய்ததில் முன்சொன்ன கருமாதிகள் புறம்பானநெறிகளென்றும் பிரபத்திநிஷ்டை என்கிறபயிருக்கு அவைகளையைப்போலொத்ததென்றும் - களையெடுத்துப்பயிர்செய்வாரைப்போலெ அவைகளிலுண்டானபசை என்ற நசையையறுத்துக்கண்ணனுடையவுணர்விலே சொல்லப்பட்ட பிரபத்தியைஸாதனபுத்தி யன்றியிலே யனுஷ்டித்து ஸம்ஸாரமென்கிற சமுத்திரத்தை வற்றிப்போகும்படிபண்ணுங்களென்றும் கருமங்களைப் புறநெறி என்று நிஷேதித்தபடியால் முன் சொல்லப்பட்ட பாசுரங்கள் பிராம்மணர்களுக்கு அங்கமென்று சொன்ன இத்தனையொழியக் கருமங்கள் செய்வதற்கு விதியாகமாட்டாது - ஆனால்தென்கலையார் கருமாதிகளை யனுஷ்டிப்பதற்தக்கருத்தென்னெனில் - ఆనృశంస్యః పరో ధర్మః - என்றுபிராணிகளிடத்தில் கிருபைகூர்ந்திருக்கைப் பரமமான தர்மமென்று சாஸ்தரஞ்சொல்லுகையால் கியானத்தில் பாலியாளுக்கிருந்த பிரபத்திநிஷ்டையில் துணிவுகிடைத்திருக்கமாட்டாதென்று சிஷியபுத்திர உஜ்ஜீவனார்த்தமாக லட்சுமிதந்திரத்தில் வைஷ்ணவ யிந்திரனைக்குறித்துப் பிராட்டியருளிச்செய்தபடியே அனுஷ்டிக்கிறார்கள்.

(ஏகாதசிசிரார்த்தம்.)

நாங்களும்அப்படியேஅனுஷ்டிக்கிறோமென்னில்அது நிஜமாகமாட்டாதுசிராத்தத்தைமுக்கியமா

ஃக்சருதிஏகாதசியிலுஞ் சிராத்தஞ்செய்கையால் -
சுருதியில்-పక్షేపక్షేయేకాదశ్యాన్నయాజయేత్-న
తర్పయేత్ - న శ్రాద్ధకర్మంకుర్వీత - యదిమో
హేనకుర్యాత్ - సోగ్నిహా. సమాతృహా. సపితృ
హా. యతిశ్శతపత బ్రాహ్మణే - என்பதில் பக்ஷ

பக்ஷங்களில் வரப்பட்ட ஏகாதசியில் யக்கியம்-தற்பணம் - சிராத்தங்களானகருமங்கள் பண்ணக்கூடாது - அக்கியானத்தாலெ செய்தவன் அக்கினியையும் மாதாபிதாக்களையுங்கொன்றவன் போகிற பாபங்களில்போகக்கடவனென்றும்.புராணத்தில்-
సూతకాదౌయథా శ్రాద్ధం- సూతకాంతేవిధీయతే
తద్వైకాదశీ శ్రాద్ధం- ద్వాదశ్యామేవకారయేత్

என்பதில் - சூதகத்தின் ஆதியில்வந்த சிராத்தமசூதக அந்தத்தில் பண்ணுவதுபோல ஏகாதசியில் வந்தசிராத்தத்தைத் துவாதசியில்பண்ணக்கடவனென்று வேதவிதியிருந்தும் சருமாதிகளை முக்கியமாய்க்கருதி அதில் ஊன்றி அதனாலெ பிரபத்திநிஷ்டைக்குமிகுந்ததாரத்திலிருக்கின்ற விவர்கள் ஆசாரியாபிமானித்தாலெ பேறென்றிருக்கிற தென்கலையாருடனே சமமென்று எந்த வகாரத்தினாற் சொல்லக்கூடும் -

இதுவுமன்றி வடவாரியர்கள் தாங்கள் செய்தபாபங்களைக்குறித்துப் பிராயச்சித்தம்பண்ணிக்கொள்வதினாலெ ஆத்மா அபஹாரம் பண்ணின

பிரபலபாபத்தை அடைகிறார்கள் - எப்படியென்னில் சுருதியில் - తథావిద్వా౯ పుణ్యపాపే విధూయనిరంజనః పరమంసామ్యముపైతి - என்பதில்

பகவானைச்சரணாகதிபண்ணினவனுடைய புண்ணியங்களையும் பாபங்களையும்விடுவித்து அஞ்ஜனமென்று கறுப்பாய் அத்தாலெ பாபத்தைச்சொல்லி நிரஞ்ஜன மென்று பாபரஹிதனாக்கி - பரமமான ஸமானத்வத்தையடைவிக்கிறானென்றும்- மற்றொருசுருதியில் - ద్విషంతః పాపకృత్యాం - என்பதில் பிரபன்னர்கள் செய்யப்பட்டபாபங்களை அவர்களுக்குவிரோதிகள்பேரில்ஏற்றுகிறானென்றும் சுருதி - నహిధేతస్తచ్ఛనః - என்பதில்பிரபன்னன் எப்படிப்பட்டபாபங்களைக்குறித்தும் அஞ்சக்கடவனல்லனென்றும் - சுருதி-అథసో భయంగత భవతి என்பதில் பிரபன்னனானபின்பு அவன்அபயத்தை யுடைத்தாயிருக்கின்றானென்றும் - சுருதி- నఖలు భాగవతాయమవిషయంగచ్ఛంతి - என்பதில் பாகவதர்கள்விஷயத்தில் இயமன்பிரவேசியானென்றும் இதற்குச்சரியாய் சுரிதி - యథైషీకాతూలమగ్నౌ ప్రోతంప్రదూయేతా - நாணல் பூநெருப்பில் விழுந்து எப்படிநசிக்குமோ அப்படியே ஆசா

ரியஸமாஸ்ரயணத்தால் சஞ்சிதம் பிராரப்தமுமா
வான - సర్వే పాప్మానః ప్రదూయంతే - என்ப
தில் சமஸ்தபாபங்களையும் (போயபிழையும் பு
குதருவா நின்றனவுந் தீயினில் தூசாகு) வுடன்
பதில் பற்றுவதற்கு முன்பும் பற்றின பின்பும்
செய்த பாபங்களை அக்கினியில் விழுந்த தூசு
போலநசிப்பிக்கிறனென்றும் - கீதையில் -అహం
త్వా సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి - என்பதில்
நானுன்னுடைய சமஸ்தபாபங்களில் நின்றும்விடு
விக்கிறேனென் என்றும் - మాశుచః - என்பதில் புண்
ணியகருமங்களை விட்டோமென்று பயப்படாதே
என்றும் - ஆழ்வார்( சார்ந்தவிருவல் வினைகளுஞ்ச
ரித்துமாய்ப்பற்றறுத்து)என்பதில் பிரபன்னனைச்
சார்ந்திருக்கிற புண்ணியபாபங்களையும்விடுவித்து
அல்லதுஇருடைபெருமையாய் பிரபலபாபங் கா
யும் போக்கி மாயாசம்பந்தமான பற்றுகளையும்
அறுக்கிறனனென்றும் - தேசிகர் தயாசதகத்தில் -
కమలానిలయస్త్వయాదయాలు - కరుణానిష్కరుణే
నిరూపణేత్వం - అతయేవహి తావకాశ్రితానాం-
దురితానాం భవతి త్వదైవభీతిః - என்பதில் ஸ்ரீநி
வாஸா நீயோதயாளு - உனதுகருணையினிடத்தில்
தயையில்லாமையை நிரூபிக்கிறுய் - அதனாலன்

றே உன்னடியாருடையபாபங்கள் உன்னிடத்தில் பயப்படுகிறதுகள் - இதனால் அடியாருடையபாபங்களிடத்தில் தயையில்லாமல் அவைகளைச்சம்மரிக்கிறாய் என்றும் சொல்லப்பட்டவைகளில் பாபத்தைப்போக்குமவன் ஈசுவரனாயிருக்க வடவாரியர்கள் பாபங்களைத்தாங்கள்பிராயச்சித்தம்பண்ணிப்போக்கிக்கொள்ளுகிறோமென்று பிரமிப்பதுபாரதந்திரியத்தைச்சேருமோ - స్వత్వం ఆత్మని సంజాతం - స్వామిత్వం బ్రహ్మణిస్థితం - என்பதில் உடைமை என்ற ஸ்வத்வம ஆத்மாவிடத்திலும் - உடையான் என்றஸ்வாமித்துவம் ஈசுவரனிடத்திலுஞ்சாஸ்தரஞ்சொல்லியிருக்கின்றது - அப்படியிருக்க-

యోన్యథాసంతమాత్మానం - అన్యథాప్రతిపద్యతే.
కిం తేననకృతంపాపం - చోరేణాత్మాపహారిణా - என்

பதில் யாவனொருவன் ஈசுவரனுடைய சொத்தானதன்னை ஸ்வதந்த்ரனாய்த் தனக்குத்தானே உரியவனென்று கருதியிருக்கின்றானோ அந்த ஆத்மா அபஹாரியான திருடனாலே என்னபாபம்பண்ணப்படவில்லை - எல்லாப்பாபங்களும் பண்ணப்பட்டதென்று கருத்து - இந்தப்பிராயச்சித்தவிஷயத்தைக்குறித்து பாபத்தை ஈசுவரன் போக்குகின்றானென்று இதுவரையில் சொன்னபிரமாணங்களை லோகாசாரியர் திருவுளம்பற்றி ( ஆபத்தைப்போக்கிக்கொள்ளுகிறோமென்று பிரமித்து அத்தை

ளைத்துக்கொள்ளாதொழிகையே வேண்டுமென்
று ) அருளிச்செய்தார்.

(வைசுவதேவகண்டனம்.)

பிரபன்னன்பாபத்தை ஈசுவரன் போக்குகின்றா
னென்று சுருதிகளிலும் இதிஹாஸமான ராமாயண
த்திலும் பாரதகீதையிலும் புராணங்களிலும் ஆழ்
வார்களும் - ஞானஸாரத்தில் அருளாளப்பெருமா
ளெம்பெருமானார் தேசிகர் முதலான பூருவாசாரிய
களும் அருளிச்செய்ததன்றிக்கே ஈடு முப்பத்தா
றாயிரப்படியிலுமீசுவரனே போக்குகிறானென்று
பலவிடங்களில்யிருக்க! வடவாரியர்கள் தங்கள் பா
பத்தைத்தாங்கள் பிராயச்சித்தம்பண்ணி நசிக்கப்
பண்ணுகிறோமென்று சொல்வது பகவத்சாஸ்திர
மான ஸ்ரீபாஞ்சராத்திரத்துக்கும் உடையவர் நித்தி
யத்துக்கும் விரோதமாயிருக்கும் - அதாவது - ல
க்ஷ்மிதந்திரத்தில் இந்திரனுக்கு பிராட்டியுபதேசித்
ததாவது - త్రివిధాంపశ్య దేవేశ - కర్మ గహ
నాంగతం - கருமங்கள் மூன்றுவிதங்கள் அதாவது
புண்ணியகருமம் - பாபகருமம் - பிராயச்சித்தக
ருமம் - అనర్థసాధకంకించిత్ - కించిచ్చాప్యర్థ
సాధకం - అనర్థపరిహారాయ - కించిత్ కర్మ ప్రయు
జ్యతే - త్రైరాశ్యంకర్మణామేవం . విజ్ఞేయంశా
స్త్ర చక్షుషా - அனர்த்தஸாதகமாவது சேனவிதிள
ளருணியகருமங்கள் - அர்த்தஸாதனகருமமாவது

ஸ்வற்கத்தின்பொருட்டுசெய்யப்பட்ட ஜோதிஷ்ட
ஓமாதிகள். அனர்த்தபரிஹாரகருமமாவது எந்தவி
தபாபங்களைக் குறித்தாவது பிராயச்சித்தம் பண்
ணுகிறகருமம் - ఉపాయాపాయసంజ్ఞౌతు - పూర్వ
రాశిపరిత్యజేత్ - புண்ணியகருமங்களையும் பாபக
ருமங்களையும்நன்றாகவிடக்கடவன்-త్రయోద్వి
ధో రాశి - రనర్థపరిహారకః - மூன்றுவது சொன்
னபிராயச்சித்தகருமங்கள் இரண்டுபடிபட்டிருக்
கும் - அதாவது உத்பன்னனர்த்தநாசகமென்றும்-
உத்பத்ஸ்யமான அனர்த்தநாசகமென்றும் இர
ண்டுபிரகாரமாயிருக்கும் - இவைத்தில் பின்சொ
ன்னது தன்னையநுஷ்டித்தால் பிரத்தியபாயம் வ
ராமலிருக்குகை - முன்சொன்னது நிஷித்தாநு
ஷ்டானத்தாலுண்டானபாபநிவற்தகமாய் பிராய
ச்சித்தமென்றே பிரசித்தமாயிருக்கும் - తమంశ్
నైవకుర్వీత - మనీషీపూర్వరాశివత్ - பாரதந்த்ரி
ரியகியானமுடைய பிரபன்னன் பாபநிவற்தி ஈசு
வரனாலெ யாகும்படியிருக்குமவனாகையால் உத்
பன்ன அனர்த்த நாசகங்களான பிராயச்சித்தங்க
ளையும்பண்ணக்கடவனேயல்லன் - నైవకుర్వీత-எ
ன்றயேவகாரத்தால்அவைத்தில்பிராமாதிகத்தாலெ
அன்வயித்தாலும் ஸ்வரூபநாசமென்கிறது - ஆக
பாரதந்த்ரநிஷ்டனான பிரபன்னனுக்கு புண்ணிய-

பாப - பிராயச்சித்தங்களான மூன்றுவிதகருமங் ளுந் தியாஜ்ஜியமென்று பிராட்டி யருளிச்செய் தார்- நித்திய நித்தியகருமங்களுக்கு பாவிய அனு தத்தாலெ நாசத்துவமில்லை யாகையால் அது மாத்திரம் அனுஷ்டிக்கத்தக்கதென்றும் நித்தியா னுஷ்டானத்தில் பிராயச்சித்த விதி கூடாதென்று ம் அருளிச்செய்தார் - து காரம்யேவகார அர்த்த த்தைக்காட்டுகையாலெ நித்தியகாம்மிய நித்திய நைமித்திகங்களிரண்டிலும் அன்வயித்தால் அது பரதந்திரஸ்வரூபத்தை நாசம்பண்ணுமென்றார்- நித்தியகாம்மிய நித்தியநைமித்தியங்களாவன- வை குண்டேவம் - மஹாளயம் - சிவராத்திரி - பஞ்ச மஹாயக்கியாதிகள் - இவை காம்மியபலத்துக்கு ஸாதனங்களாகையாலும் - நைமித்திகங்கள் பிரா யச்சித்தங்களாகையாலும் முன்சொன்ன புண்ணி ய - பாப - பிராயச்சித்தங்கள்போலே தியாஜ்ஜிய ங்களாகவிதித்தார் - புத்திபேதத்தாலெ அனுஷ்டி த்தாலோவென்னில் அப்போது சிவராத்திரியனுஷ்
டானமுங் கூடுமிறே - ఏషా సావై దివానిష్ఠా - హ్యు
పాయాపాయమధ్యగా - అస్యాంస్థితో జగన్నాథం -
ప్రపద్యేత జనార్దనం - இந்தநித்திய கருமானுஷ் டான நிஷ்டையானது பிரபன்னாதிகாரிகளுடைய அனன்னியஸாதனத்வ ஸ்வரூபாநுரூபமாய்வேதப் பிரமாணஸித்தமாய் உபாயத்திலும் அன்வயியா மல் நிஷித்தானுஷ்டானத்திலும் அன்வயியாமல் உபாயஅபாயங்களிரண்டுக்கும்நடுவே வர்த்தியாநி

ன்றுள்ள வைதிககருமநிஷ்டை-ஸ்ரீ - என்றுசுருதி ப்பிரதிபாத்தியமான திருமந்திரத்தில் சொன்ன பாரதந்திர நிஷ்டையைச்சொன்னபடி - இந்த பாரதந்திர நிஷ்டையுடையசேதனன் நம்மைச்சரணமடைவதெப்போதோவென்று எதிர்பார்த்திருக்கும் எம்பெருமானையே யுபாயமாகப் பற்றக்கடவன் என்றுபிராட்டியருளிச்செய்தார்.

இன்னமும் வாசுதேவ சம்மிதாதிகளிலும் - నకుర్యాద్వైశ్వదేవంతు - ద్విష్ణ్వారాధనలోలుపః యదికుర్యాద్విమోహేన - బ్రహ్మహత్యాసమంభవేత్ என்று விஷ்ணுவின் ஆராதனத்திலேதானே பக்தியுடையவன் வைசுவதேவம் பண்ணக்கடவனல்லன் - அக்கியானத்தாலே செய்தவன்பிரம்மஹத்திக்கு சமானமானபாபத்தில் போகக்கடவன் என்றும் - వైశ్వదేవహుతోచ్ఛిష్టం - నభుంజ్యాద్వైష్ణవోత్తమః - విష్ణోర్నివేదితాన్నంతు-లోకపావనపావనం- వైశ్వదేవహుతోచ్ఛిష్టం-భుక్త్వా చాంద్రాయణంచరేత్ - என்று வைசுவதேவம்பண்ணசேஷமான நெய்யை வைஷ்ணவோத்தமாள் புஜிக்கக்கூடாது - அப்படிபுஜித்தவர்கள் அந்தபாபநிவர்த்திக்குசாந்திராயணம் என்ற கருமத்தைப் பண்ணக்கடவர்கள் - என்றும் - విష్ణోర్నివేదితాన్నంతు . పావనంలోకపావనం - பெருமாளுக்கு நி

வறித்தபிரஸாதம் லோகத்தாரைபவித்திரம் பண்
ணப்பட்டபவித்திரமாயிருக்கின்றது - து - அவ்வி
யம் - ప్రస్వాపే చ ప్రబోధే చ - పూజితో యేన
కేశవః - కిం కార్యం వైశ్వదేవేన - దేవపూజాపరస్య
వై - நித்திரையிலும் மெழுக்குவையிலும் யாரா
லெபெருமாள் பூஜிக்கப்பட்டு ஆராதனத்தில் ஆ
ஸக்தியுடையவர்களுக்குவைசுவதேவத்தாலேயென்
னபிரயோஜனமென்றும் - కిం వాయ జ్ఞేనదానేన
వైశ్వదేవభూజప - எக்கியத்திலுந் தானத்தி
லும் வைசுவதேவத்திலும் என்னபிரயோஜன
மென்றும் - వైశ్వదేవహుతోచ్ఛిష్టం - నభుంజే
ద్వైష్ణవోత్తమః - శునోచ్ఛిష్టం పురోడాశం - య
థా త్యక్ష్యంతి యాజకాః - విష్ణోస్తు వేదితాన్నం తు
పావనం లోకపావనం - என்ற சுலோகங்களிலும்
வைசுவதேவத்தில் இதரதேவதையின்உச்சிஷ்டமா
ன அன்னத்தை எக்கியத்தில் ஓமம்பண்ணப்பட்ட
வர்கள் நாய்தினற்புரோடாசத்தை எறிவதுபோல்
எறியவேணுமொழிய வைஷ்ணவ உத்தமாள் புஜி
க்ககூடாது. இன்னமுங் கோவிந்தராஜர் செய்த
ருளின வைசுவதேவ கண்டனத்திலும் நாதமுனிக
ள் - ஆளவந்தார்- ஸ்ரீபாஷியகாராதிப்பிரபூர்திகள்

அனுஷ்டித்ததில்லை என்றும் இன்னஞ் சில விவரங்களுங்கண்டு கண்டித்திருப்பதுகளில் சுருக்கமொழியக்காணலாம்.

முடிவில் ஆழ்வார்கள் (எப்போது நங்கைகழலாநேமியான் நம்மேல்வினைகடிவான்) என்றும் (களைவாய் துன்பங்களை யாதொழிவாய்களை கண்மற்றிலேன்) என்றுமிப்படி யனேகம்பாசுரங்களில் பாப நிவர்த்தி ஈசுவரனாலேயென்று முன்சுருதியில்சொன்னபடியே நிச்சயித்து (மைத்தெழுந்தமாமுகிலேபார்த்திருக்கும்மற்றவை) என்றும் (நெறிவாசல்தானேயாய் நின்றானே) என்றும் (விழிக்குங்கண்ணிலேன் நின்கண்மற்றல்லால்) என்றுஞ்சொன்னதுபோல அனேகவிடங்களில்மேகத்தைப்பார்த்திருக்கும்பயிர்போல் எம்பெருமானுடைய அருளையேமோக்ஷத்துக்கு உபாயமாக நினைத்துயிருப்பர்கள். ஐயங்காரும் (வான்பார்க்கும் பைங்கூழ்போல் வாளாவுனதருளே யான்பார்க்க நீபார்த்திரங்கினாய்) என்று - சயவது லக்கமுடையபக்கத்தில் ஈசுவரன் எவனைவரிக்கிறானோ அவனாலெலபிக்கக் கடவனென்றும் அவனுக்கேதன்னைக் கொடுக்கிறானென்றுஞ் சொன்னஅர்த்தத்தை இவரும்மேகத்தை எதிர்பார்க்கும்பயிர்போலேஉன்னுடைய நிர்ஹேதுககிருபையையே நான்எதிர்பார்க்கும்படி நீயிரங்கினாய் என்றருளிச்செய்தபடியால் இப்படிப்பட்ட அதிகாரிக்குதன்பாபங்களைக்குறித்து தான்பிராயச்சித்தம்பண்ணிக் கொள்ளுகிறேனென்று பிரமிப்பது ஈசுவரனைபாபங்களைப்போக்கவேண்டா

வன்று விலக்குமவர்களென்று விசிதமாகலாம், லட்சுமிதந்திரத்தில் பிரபன்னுள்வைசுவதேவம் னுஷ்டிக்கக்கூடாதென்றிருப்பதை எப்படிதெ ந்துக்கொள்ளவில்லையோ அப்படியே அதில் பி ராட்டிக்குப் புருஷகாரத்துவமே யுள்ளதென்று சால்லி யிருப்பதையுமறிந்துக்கொள்ளவில்லை - ப்படியெனில் - வடவாரியாள் பிராட்டிக்கு ஈசு ரனைப்போலே வியாபகத்துவமும் - மோக்ஷத் துக்கு உபாயத்துவமும் உண்டென்றும் அத்தால் ருவர்க்கும்இரண்டுதண்டம்ஸமர்ப்பிக்கின்றோம் ன்றும்சொல்லுகிறார்கள் - தென்கலையார்ஈசுவர னுக்கே வியாபகத்துவமும் உபாயத்வமும் உண் டென்றும் பிராட்டிக்கு புருஷகாரத்வமும் அணு த்வமுமேயுள்ளதேதென்றும் அத்தாலொருதண்டம் ஸமர்ப்பிக்க வேணுமென்று சொல்லுகிறார்கள் - தென்கலையாருக்கு சுருதி-ஸ்ரீபாஞ்சராத்திரம்- ஆ ழ்வார்களுடைய பிரமாணபலமுண்டாயிருக்கின்

றது.சுருதியில்(த்வயம்)என்றமந்திரத்தில்-చరణౌ - என்பதில்(த்விவசனாந்தமாய்) ஸ்ரீமந்நாராயணனு டைய இரண்டு திருவடிகளைச் சரணமாக வடைகி றேனென்று பெருமாள் திருவடிகளை மாத்திர

ஞ் சொல்லுகையாலும் - ஸ்ரீபாஞ்ச ராத்தி ரத்தில் - మ (త్వా) ష్టిం(ప)ఠిజా మూనాం _ సం

సా రేః పత తామధః - மிதந்த பாபங்களாலெ கி ழாநரகத்தில் அழுந்தி கீழ்க்கடையிலிருக்கும் ஆ

த்மாக்கள் என்னையடையும்படியாய் - లక్ష్మ్యోపు
షకారేణ பிராட்டியைப்புருஷகாரமாக - నిర్దిష్టో
పరమర్షిభిః - மஹாருஷிகளாலெ நிச்சயிக்கப்ப
ட்டிருக்கின்றது - మమాపి చ మతం హ్యేతత్ - அது
எனக்குஞ்சம்மதமே - నాన్యథా లక్షణం భవేత్ -
இதற்குவேறில்லை - என்றுபகவான் அருளிச்செய்து
எனக்குஞ் சம்மதமென்றதில் பிராட்டிக்குஞ் சம்
மதமென்றுநிச்சிதம் - ஆழ்வார் ( அகலகில்லேனி
றையுமென்றலர் மேல்மங்கை யுறைமார்பா - புக
லொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்து புகு
ந்தேனே) என்றருளிச்செய்ததில் புஷ்பத்துக்குப்
பரிமளம் விசேஷணம்போல பிராட்டியை விசே
ஷணமாக வருளிச்செய்து உன்னடிக்கீழ் என்றுதி
ருவேங்கடமுடையானை விசேஷியமாய் பரிமளத்
தையுடைய புஷ்பம்போலும் அருளிச்செய்தபடி
யாலும் - பிராட்டிதிருவடிகளில் சரணமாகவடை
ந்த காகாசுரன்தலையைபெருமாள் திருவடிகளில்தி
ரணத்தாலெதிருப்பி - వధార్హమపి కాకుత్స్థ - కృ
పయాపర్యపాలయత్ - இவனைவதிக்கயோக்கிய
னைபோதிலுங் கிருபையாலெ ரக்ஷியுமென்றுபு
ருஷகாரம் பண்ணாரொழிய தானாரக்ஷிக்கவில்
லை - తత్తస్య సదృశం భవేత్ - என்று பிராட்டிதம்
மைரக்ஷிப்பது சக்கரவர்த்தித் திருமகனுக்கேதகு

தி என்றும் - అనన్యా రాఘవేణాహం భాస్కరేణ ప్రభా యథా - என்று சூரியனுக்கும்பிரபைக்கும்உள்ளதுபோல் எனக்கும் பெருமாளுக்கும் உள்ளதன்மை என்றும் அருளிச்செய்தார். தேசிகர் (இன்னமுதத்திருமகளென்றிவர்களை முன்னிட்டெம்பெருமான் திருவடியையடைகின்றேனே) என்று பிராட்டியை புருஷகாரமாக வருளிச்செய்திருக்கிறபடியாலும் ஒரோதண்டன ஸமர்ப்பிக்கிறது பிராட்டிக்கு சம்மதமென்றும் ஈசுவரன் ஸந்நிதியில் தமக்குப் பிரத்தியேகதண்டன ஸமர்ப்பிக்கிறதுசம்மதமல்லவென்றும் நிச்சிதம்.

வடவாரியர்கள் - பிரபந்னன் அந்திமகாலத்தில் ஸ்துதிபண்ணுமற்போமுல் மோக்ஷமில்லை என்றார்கள். தென்கலையார் (எப்பொழுதும் நாள்திங்களாண்டூழியூழிதோறும் அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே) என்றருளிச்செய்த படியால் சாதனபுத்தியன்றியிலே சார்வகாலமும் ஸ்துதிக்கவேணுமொழிய அந்திமகாலமென்றொருநியதியும் அத்தால் மோக்ஷமென்ற சாதனபுத்தியுங் கூடாதென்றார்கள் - இதற்குப்பிரமாணம் தேவபிரான் திருக்கச்சிநம்பிகளுடனே - అంతిమస్తుతివర్జనం என்று அந்திமகாலத்தில் ஸ்துதிபண்ணவேண்டியதில்லையென்றும் - வராஹபுராணத்தில்வராஹப்பெருமாள் - తతస్తం మ్రియమాణంతు - కాష్ఠపాషాణ

సన్నిభం అహంస్మరామిమద్భక్తం. నయామి పర
మాంగతిం -என்று மனசும் - சரீரமும்-தாதுககளு
ம்நன்றாயிருக்குங்காலத்தில்சேஷித்வ பாரதந்திர
யகியானத்துடன் சாதனபுத்தியன்றி ரஷகதி
பண்ணினவன்காஷ்டபாஷாணங்களுக்குச் சமான
மாயிறக்கிறகாலத்தில் அவனை நான் நினைக்கிறேனெ
ன்றும் பின்னும் பரமபதத்தையடையப்பண்ணு
கிறேனென்றும் - அருளிச்செய்திருக்கிறபடியே
நம்பியிருக்கிறவர்களாகையால்அந்திமஸ்துதிபண்
ணுவதென்றநிற்பந்தம்வேண்டியதில்லை என்றார்க
ள்.(அப்போதைக்கிப்போதெசொல்லிவைத்தேன
ரங்கத்தரவணைப்பள்ளியானே) என்றதுமுதலான
ஆழ்வார்கள் திவ்வியசூக்திகளுக்கும் விரோதிக்கு
ம் - அஞ்சலிஃ - என்றதற்கு அர்த்தம் - అ - జలయ
తీతి అంజలిః - என்று அகாரவாச்சியனான விஷ்ணு
வை ஒருக்காலமுன்சொன்ன கிரமத்தில் அஞ்சலி
செய்தால்அவன்விஷயத்தில் - ఋణం ప్రవృద్ధమి
వ మే హృదయాన్నాపసర్పతి- என்று துரோபதை
பண்ண அஞ்சலிக்குநான் ஒன்றுஞ் செய்யவில்லை
என்னுடையதிருநாமமேவஸ்திரங்கொடுத்தது அந்
த அஞ்சலிஎனக்குக்கடனாயிருக்கின்றதென்றுஉரு
கினதுபோலஜலரூபமாய் ஈசுவரன்திருவுள்ளத்தை
உருகப்பண்ணுமென்கையால் இதற்குமேல் சாத

னபுத்தியாய் அந்திமஸ்துதிபண்ணுல் பிரபத்திந முவும்.

தென்னுசாரியாள் எம்பெருமானுடைய அனந்தகலியாணகுணங்களில் வாச்சலியகுணமென்பது முக்கியமென்றும் "ஸ்ரீபாஷியகாரர்கத்தியத்தில் - అపార కారుణ్య వాత్సల్య జలధే-என்றுகளாயில்லாதவாச்சலியகுணசமுத்திரமேஎன்றருளிச்செய்தபடியே" அடியார்கள்செய்த குற்றங்களைபோக்கியமாகக்கொள்ளுமது-வாச்சலியமென்றுர்கள். அதற்குவடவாரியாள் - வாச்சலியமாவதுதோஷித்தைப்பாராமலிருக்குமது வாச்சலியகுணமென்றுர்கள் - தெ - சொல்வதர்க்குப்பிரமாணம்- దోషో యద్యపి తస్య స్యాత్ - సతా మేతదగర్హితం - என்கிறபடியே ஆஸ்ருதருடையதோஷம்பாராதெஅங்கீகரிக்கைக்கீடான இரக்கமென்று - ரஹஸ்யத்திரயரக்ஷையில்த்ரைகுண்யாதிகாரத்திலும் - ஸ்மன்வயாதிகரணத்திலும்.வாச்சலியமாவது- వత్సః వత్సలః - என்றகுலோகத்துக்கு தோஷித்தை குணமாகக்கிரஹிக்கைஎன்றருளிச்செய்தார்-ஆழ்வார்கள்(தன்னடியார்திறத்தகத்திற்றுமாயாளாகிலுஞ்சிதகுரைக்குமேல் என்னடியாரதுசெய்யார்செய்தாரேல்நன்று செய்தாரென்னுஞ்சொல்) என்றும்(குன்றனையகுற்றஞ் செய்யினுங் குணங்கொள்

ளும்)என்றும் (செய்தகுற்றம் நற்றமாகவேகொள்ளாலநாதனே) என்றும் ஆசாரியாளில் அருளாளப்பெருமா ளெம்பெருமானார் கியானசாரத்தில் (அற்றமுனாக்கிலடைந்தவர்பாலம்புடையகோன்.குற்றமுணர்ந்தி கழுங்கொள்கையனோ - எற்றேதன் - கன்றினுடம்பின் வழுவன்றுகாதலிப்ப - தன்றதனைபீன்றுகந்தவா)என்றும்அருளிச்செய்தார்கள் - இதற்கு அர்த்தம் - தனிசுலோகத்தில் வாச்சலியமாவது நீச்சடிக்கிறதறையில் புல்தின்றுதபசுஅன்று யீன்றகன்றின்தோஷத்தைத்தன்பேருகப்போக்குவதுபோலதன்கலியாணகுணங்களாலெதரிப்பிக்கைஎனறு பெரியவாச்சாமபிள்ளை வியாக்கியானஞ்செய்தார் - தோஷ போக்கிய னென்றல்புத்திபூர்வகமான பாபங்களுஞ்செய்யவேண்டிவாராதொவென்னில்வாராது - எப்படியென்னில் - மனசு - வாக்கு - காயகங்களென்கிற மூன்றினல்பாபங்களுண்டாகிறன. காயகத்தால் வருமதற்கு அரசர்கள்சிக்ஷை யுண்டானகயால் அதுவரறேதுவில்லை - மனத்தினுல்வருமதற்கு - జలేనజనితంపంకం జలేనపరిశుద్ధతి - చిత్తేనజనితంతాపం - పశ్చాత్తాపేనశుద్ధతి - என்று ஜலத்தில் சேறுண்டாகிறது மறுபடியும்ஜலத்தினல் அதுபரிசுத்தமாகிறப்போல் மனத்தினு லுண்டானபாபம் மறுபடி அனுதாபத்தினல் அது நிவர்த்தியாகிறதென்று சாஸ்தரஞ்சொல்லுகையால் மானசீகமான பாபம்வ

ரஹேதுவில்லை - பிரபன்னனுக்கு வாக்கினால் பா
பம்வரஹேதுவில்லை - வாக்கில் குருபரம்பரை
புடனேத்வயானுசந்தானம் பண்ணிக்கொண்டிரு
ப்பர்களாகையாலும் சார்வகாலமும் பகவத்விஷ
யத்தில் காலக்ஷேபம்பண்ணிக்கொண்டு காலத்தை
க்கழிக்கையாலும்-இந்திரியங்களுடைய கொடுமை
யை நினைத்து அஞ்சிபாபங்களுக்குப்பயந்துஇருக்
கும் ஆஸ்திகாளுக்கு பாபம்வரப் பிரசங்கமில்லை-
கண்டாகர்ணன் முதலானோர்செய்த பிர்ம்மஹத்திக
ளை நரமேதயாகம்பண்ணினதாக வெண்ணிப்பரம
பதங்கொடுத்ததுப்பிரசித்தம்-அன்றியில்அவனைப்
போல் பிரம்மஹத்தியைச்செய்வாருமில்லை யாத
லால் வீண் ஆக்ஷேபம் - இப்படிப்பட்ட மஹாகு
ணத்தை ஆழ்வார் செய்தாரேல் நன்றுசெய்தாரெ
ன்று அருளிச்செய்ததற்கு விரோதமாய் அர்த்தஞ்
சொல்வழினாலெ திராவிடவேதத்தை நிந்தித்தவர்க
ளாய் நிந்தித்தவர்களுக்குச் சொன்ன நரகம்சித்த
மாகிறது மன்றியில்அவர்கள் துர்மதிகளென்று -
அ-ம்-பக்கத்தில் சொல்லியிருக்கின்றது.

வ'-வாரியர்கள்ஈசுவரனுக்குத்தடாளகுணமென்ப
து-தன் ஆஸ்ரிதாளுடைய துக்கத்தைப்போக்குமது
என்று சொன்னார்கள் - தென்னாசாரியாள் அதுஈ
சுவரனையொழிந்த எல்லாருக்குமுண்டு ஆஸ்ருதரு
டைய துக்கத்தில்தான் துக்கப்படுகிறதுதயையென்
றும்அதற்குப்பிரமாணம்சுருதி- సయో కాకినర మేత-
என்றும் - వ్యసనేషు మనుష్యాణాం భృశంభవతిదుః

ఖతః - పుత్రవేషుచసర్వేషు - పితేవ పరితుష్యతి -
என்பதுகளில் மனுஷியாளுடைய துக்கத்தில் எம்பெருமானதுக்கின்றதாயும் சேஷித்துவபாரதந்திரியகியானமுடைய உச்சாஹத்தில்புத்திராளுடைய உச்சாஹத்தில் பிதாசந்தோஷிக்குமாபோலசந்தோஷிக்கிருனென்றும் பிரமாணஞ் சொல்லுகையால் ஆத்மாக்களுடையதுக்கத்தில் ஈசுவரன் துக்கிக்கிருனென்றதுவே நிச்சிதம்.

பாகவதவைபவம்.

శతం బ్రాహ్మణముఖ్యేభ్యో వరమేకోపి వేదవిత్ -
நூறுபிராமணளுக்குள்ளே வேதம் படித்திருந்த ஒருவர்சிரேஷ்டர்என்றும் - వేదవేద్యసహస్రేభ్యో వరమేకోపి యజ్ఞవిత్ -வேதம்படித்த ஆயிரம்பேரில் எக்கியம்பண்ண ஒருவர்சிரேஷ்டரென்றும் - యజ్ఞయజ్ఞసహస్రేభ్యో వరమేకో జితేంద్రియః - எக்கியம்பண்ண ஆயிரம்பேரில் இந்திரிய ஜயம்பண்ணி ஈசுவரனை உபாசிக்கிறஒருவர்சிரேஷ்டர்என்றும் - జితేంద్రియసహస్రేభ్యోవరంవిష్ణుశ్చదాస్యవిత్ - இந்திரிய ஜயம்பண்ண ஆயிரம் பேரில் சுருதியில் - యస్యాస్మి - என்றும் - అహమపిన మమ - భగవతయేవాహమస్మి - என்றும்எனக்குநான்

உரியனன்று பகவானுக்கே நான்சேஷபூதனென்
று சொன்னபடியே சேஷத்வ கியானமுடைய
வர்களை சிரேஷ்டரென்று சொல்லியிருக்கின்ற
து - பின்னும் - தியாஜ்ஜியகோடியில் சொன்
னதபசைச் செய்தமாஹாத்மியத்தாலெ விசுவா
மித்திரன் க்ஷத்திரியத்துவத்தை விட்டு பிராம்மண
னுமாகில்சுருதி - తస్మాన్న్యాస మేషాంతపసామతిరిక్త మాహుః - என்பதில் பிரபத்தி நிஷ்டையைச்
சிலாக்கியமாகச் சொல்லுகையால் பிரபன்ன நிஷ்
டையையுடையவர்கள் (எவரோ லுமவர்கள்டீர்) எ
ன்கிறபடியேயாராகிலுஞ்சிலாக்கியாள்என்றும். ஸ்ரீ
பாகவதத்தில்ஸ்ரீசுகர் - శ్వపచోపిమహీపాల - విష్ణుభక్తో ద్విజాధికః - విష్ణుభక్తివిహీనస్తు-యతిశ్చశ్వపచాధమః - என்பதில் நாயமாம்ஸநதின்பவன் விஷ்
ணுபக்தனுயிருக்குமாகில் பிராம்மணனைப்பார்க்கி
லும் அதிகன - விஷ்ணுபக்தியில்லாத எதிசுவரனு
னபோதிலும் நாயமாம்ஸந்தின்பவனிலும் அத
மன்என்றும் - నశూద్రా భగవద్భక్తాః-విప్రాః భాగవతాస్స్మృతాః - సర్వవర్ణేషు తేశూద్రా - ఏహ్యభక్తాజనార్దనే - என்பதில்விஷ்ணுபக்தர்
கள் சூத்திரர்களன்றென்றும் - அவர்களை வி
ப்பிராளென்றும் பகவத்ஸம்மந்த முண்டானவர்
களாகையால் பாகவதாளென்றும், ஜனார்த்தன

நிடத்திில் பாரதந்திரிய கியான மில்லாதவர்கள் சூத்திரர்க ளென்றுஞ் சொல்லி யிருக்கின்றது - பாத்ம புராணத்தில் - యేయజంతిహరింప రేవ్వై - బ్రాహ్మణా ఏవ తెస్మృతః - రుద్రాదియజ మానస్తు - శూద్ర ఏవ ప్రకీర్తితః - என்பதில் ஸ்ரீ ஹரியைப் பூஜித்தவர்கள் பிராம்மணரென்றெநினைப்பதென்றும் - ஆதிசப்தத்தாலே வசு - ருத்திர - ஆதித்தன் - அக்கினிமுதலான தேவர்க்களை உபாசித்தவர்களை சூத்திரரென்றெ ஏவகாரத்தால் சொல்லப்பட்டிருக்கின்றது - దురాచారోపిసర్వాశి - కృతఘ్నో నాస్తికః పురః - సమాశ్రయేదాదిదేవం - శ్రద్ధయాశరణంయథా - నిర్దోషంవిద్ధితంజంతు - ప్రభావాత్పరమాత్మనః - என்பதில் துராசாரமுடையனுவது - பூஜிக்கத்தகாதவைகளை பூஜிக்கின்றவர்களாவது யிதுமுதலானவர்களை பரமாத்மாவின் பிரபாவத்தாலே தோஷரஹிதரென்றறிய வேண்டுமென்றும் - இது தெரிந்தும் அப்படிநினைக்கில் இவர்கள்தோஷத்தைப்போக்குஞ்சக்திசுகவரனுக்கில்லையென்றுநினைத்தவர்களாவர்களென்றும் విప్రాద్ద్విషడ్గుణయుతాదరవింద నాభపాదారవింద విముఖాచ్ఛ్వపచంవరిష్ఠం-என்பதில் அரவிந்தலோசனனுக்கு விமுகனானபன்னிரண்டுகுணமுள்ளபிரா

ம்மணனைப் பார்க்கிலும்நாயமாம்ஸந்தினபவன்வி
ஷ்ணுபக்தனானால்பிராம்மணனுக்கு அதிகமென்று
ஞ்சொல்லியிருக்கையாலும்-சுருதியில்-యథా దేత
త్ర వర్త్తేఽన్ తథా తత్ర వర్త్తేన్ తా-என்பதில்எம்பெ
ருமானிடத்தில்பக்திபண்ணுவதுபோல்அவனடியா
ரிடத்திலும் பக்திபண்ணவேணுமென்றும் - கண்
ணன்கீதையில் - భక్తిరష్టవిధా హ్యేషా - యస్మిన్
మ్లేచ్ఛేఽపి వర్త్తతే - తస్మై దేయంతతో గ్రాహ్యం స
చ పూజ్యో యథా హ్యహం - என்பதில் எட்டுவிதபக்
திகளையுடைய மிலேச்சனானபோதிலும்அவனுக்கு
கியானம் வேண்டியிருந்தால் கொடுக்கவும் - அவ
னிடத்தில்கியானமிருந்தால் கிரஹிக்கவும் பின்னு
ம் ஈசுவரனவ்வளவாகிலும் பூஜிக்கவும் அருளிச்செ
ய்ததில் த்வனி அர்த்தத்தால்ஈசுவரனைப்பார்க்கிலும்
விசேஷமாய் பூஜிக்கவேணு மென்றும் பரிஷ்கார
மாய்சொன்னபடியால் தொண்டரடிப் பொடியா
ர்இந்தசுலோகத்தை ( பழுதிலா வொழுகலாற்றுப்
பலசதிப்பேதிமாரில். இழிகுலத்தவர்களே லுமெம்
மடியார்களாகில்.தொழுமநீர் கொடுமின்கொளமி
னென்று நின்னோடுமொக்க.வழிபடவருளினாய்போ
ல மதிட்டிருவரங்கத்தானே ) என்பதில் இழிகுலத்
தில்பிறந்தவர்களாகிலும் எம்மடியார்களாகில்தொ
ழுங்கோளென்றுங் கியானத்தையுப தேசியுங்கோ

ளென்றும் அங்கிருந்தால்பெற்றுக்கொள்ளுங்கோ
ளென்றும் உன்னைப்போல் அவர்களை சேவிக்கும்
படியாயும்அருளிச்செய்தீர் என்றருளிச்செய்தார்.

பாகவதஅபிமானத்தால்மோக்ஷம்.

கீழ் ஆசாரியாபிமானத்தாலெ பேறென்று சொன்னபோதைக்கும் - "జ్ఞానీత్వాత్మైవ మే మతం - என்பதில்பாகவதாள் ஈசுவரனுக்கு ஆத்மாவென்று அருளிச்செய்த படியால்" - సిద్ధిర్భవతివా నేతి సంశయోచ్యుత సేవినః - నసంశయో(స్తి) తద్భక్త - పరిచర్యా రతాత్మనః - என்பதில் கேவலம் அச்சுதனிடத்தில்தாசியத்தையுடையவர்களுக்கு சித்தியென்றுசொல்லப்பட்ட மோக்ஷம் உண்டோ யில்லையோவென்று ஸம்சயம் அவனுடைய அடியார்களிடத்தில்தாசியத்தை யுடையவர்களுக்குசம்சயமில்லையென்றும் - యంయంస్పృశతిపాణిభ్యాం - యంయంపశ్యతిచక్షుషా - స్థావరాణ్యపిముచ్యంతే - కింపునర్బాంధవాజనాః - என்பதில் பாகவதாள் யாரை மோக்ஷ மடையவேணுமென்று இரக்கத்துடனே தங்கள்ஹஸ்தங்களாலெ தொடுகிறார்களோ அப்படியேபார்க்கிறார்களோ அவை ஸ்தாபரங்களாயிருந்தபோதினும் மோக்ஷத்தை அடைகிறதுகள் பந்துஜனங்களுக்குக் கேழ்க்கவேண்டியதென்ன வெ

ன்றுஞ் சொல்லியிருக்கின்றது - கண்டாகர்ண்ண அ
பிமானத்தால் அவன் தம்பி மோக்ஷமடைந்தான் - தா
ம்பரபர்ணிதீரத்தில் தபசு செய்துக்கொண்டிருந்த
ஒருரிஷியிடத்திலிருந்த நாய்க்கு அவடத்தில் ஸ்வா
மிகள் அமுதுசெய்த பிரஸாதத்தைபுஜித்துக்கொ
ண்டிருந்த மஹாத்மத்தால் ஆழ்வார் திருவடி பிர
ஸாதித்தருளினார் அதைக்கண்டரிஷி (வாய்க்குங்கு
ருகைத்திருவீதியெச்சிலைவாரியுண்ட நாய்க்கும் பர
மபதமளித்தாயந்தநாயோடிந்தப்பேய்க்குமிருக்
கவிடங்கொடுத்தால் பிழையோ பெருமான் ம
குடஞ் - சாய்க்கும்படிக்குக்கவிபாடு ஞானத்த
மிழ்க்கடலே) என்று விண்ணப்பஞ்செய்தமாத்தி
ரத்தில் திருவடிபிரஸாதித்தார் - உடையவர் கோ
பகன்னிகைக்குத்திருவடிபிரஸாதித்தார் - பிள்ளை
லோகாசாரியர் கலாபத்தில் "தேசிகர் ஸ்ரீபாஷியத்
தைக்காப்பாத்தினபோது" அழகியமணவாளனை தி
ருப்பல்லக்கில் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு
போகையில் மார்க்கத்தில் பெருமாள் உம்முடையச
ம்மந்தசம்மந்திகளுக்கும் மோக்ஷங்கொடுத்தோம்
என்றருளிச்செய்ய ஸ்தாபரங்களான செடிகளுக்
குங்கல்லுகளுக்கும் மோக்ஷங்கொடுத்தார் - ம
ணவாளமாமுனிகள் ஆலமரத்துக்கும் மோக்ஷங்கொ
டுத்தார் - திருக்கச்சிநம்பிகளுக்கு பாகவதஅபிமா
னம்பெற்றால் மோக்ஷமுண்டென்று தேவபிரான்
அருளிச்செய்தார். சுருதியில் - అమానవం సమాసా
ద్య - என்பதில் பாகவதஅபிமானத்தால் மோக்ஷ

முண்டாகின்றதாய் சொல்லப்பட்டிருக்கின்றது.

பாகவத நிந்தனை.

எப்படி பாகவதாளுடைய அபிமானத்தால் மோக்ஷமென்று பிரமாணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றதோ அப்படியே அவனடியாரிடத்தில் அபசாரப்பட்டவர்களுக்கு நரகமேபலமென்று சாஸ்திரஞ்சொல்லியிருப்பதுகளில் சிலதுபிரசித்தப் படுத்துகிறோம் - అనాచారా దురాచారాః - అజ్ఞాని హీనజన్మనః - మద్భక్తం శ్రోత్రియో నిందన్ - సద్యః చండాలతాం వ్రజేత్ - என்றபிரமாணத்தை ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வார் (அமரவோ ரங்கமாறும் வேதமோர்நான்குமோதித்தமர்களில் தலைவராய்சாதியந்தணர்களேலும் - நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவிலாங்கே - அவர்கடாம்புலையர்போலுமரங்கமாநகருளானே-) என்பதுகளில் நாலுவேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓதி உயர்ந்தபிராம்மணகுலத்திற் பிறந்து பகவத்விஷயத்தை சேவித்திருந்த போதிலும் அனுசாரந்துராசாரங்களையுமுடைத்தாய்அக்கியானியாய்ஹீனஜன்மத்தையுமுடைய என்பக்தனை நிந்திப்பானாகில் அப்போதேசண்டாளத்துவத்தை யடைகிறானென்றும் - మద్భక్తం శ్వపచం వాపి - నిందాం కుర్వంతి యే నరాః - పద్మకోటి శతైనాపి - న క్షమామి కదాచనః - எனபதில் என்னுடைய பக்தனைவ

ன் நாயமாம்ஸந்தின்பவனுமிருந்தபோதிலும் அவ
னை நிந்தித்தவனை நூறுகோடிபத்மமானபோதைக்
கும் ஒருக்காலும் க்ஷமிக்கமாட்டேனென்றும் -
శూద్రం వాంభగవద్భక్తం - నిషాదంశ్వపచంతథా-
వీక్షతే జాతిసామాన్యే - సయాతినరకన్నరః - என்

பதில் ஸர்வேசுவரனுடைய தாஸசம்பந்தமுள்ள சூ
த்திரன் முதல் நாய்மாம்ஸந்தின்பவன் வரைக்கும் ப
கவானுடைய தாஸர்களை ஜாதிநிரூபணம்பண்ணிக்
கொஞ்சமாய் நினைத்தவர்கள் அந்தக்ஷணம் நரகத்
தையடைவார்களென்றும் - స్పర్శవేదేనసంబంధా
త్ - లోహమప్రాకృతంయథా - విష్ణుసంబంధసం
నాగాత్ - జాతిభేదనకారయేత్ - என்பதில் ஆசாரி

யகடாக்ஷத்தாலெ பஞ்சஸம்ஸ்காரமுண்டாகி இரு
ம்புதங்கம் ஆமாப்போலெ அந்தக்ஷணமே ஜாதிந்தா
ஷிம்போம் - జన్మనాజాయతేశూద్రః - కర్మణాజా
యతేద్విజః - వేదాభ్యయనాత్ విప్రః బ్రహ్మ
జ్ఞానాత్ బ్రాహ్మణః - என்பதில பிராம்மணன் பி

றக்கச்சே சூத்திரனாய் கர்மத்தாலெ த்விஜனாய்-
வேத அத்யயனத்தாலெ விப்பிரனாய் பிரம்
மக்கியானத்தாலெ பிராம்மணனென்று பேர்வந்
தாப்போலெ ஆசாரியன்மாருடைய பஞ்சஸம்ஸ்கா
ரத்தாலெ ஜாதிதோஷம்போய் வைஷ்ணவத்விஜ

ளுகிய பிரம்மக்கியானிகளை ஆசாரியசமானராக நினையாமல் சாமானியஜன்மநிரூபணம்பண்ணுதல்-

అచావతారోపాదానం - వైష్ణవోత్పత్తిచింతనం.

మాతృయోనిపరీక్షాయాం తుల్యమాహుర్మనీషిణః -

என்பதில் அர்ச்சாவதாரத்தில் பஞ்சலோஹப்பிர திபத்தி பண்ணினவனும் - வைஷ்ணவாளுடைய உத்பத்தியை நினைத்து தூஷித்தவனும் மாத்ரு யோனிப்பரீக்ஷைபண்ணினவன் பாபத்தில்போகக் கடவன் என்றுஞ்சொல்லியிருக்கின்றது - இவ்வர்த் தத்தை பிள்ளைலோகாசாரியர் - இதரவர்ணத்தில் அவதரித்திருக்கின்ற பாகவதாளுக்கு - வசு - ருத் திர - ஆதித்திய - அக்கினிகளை உபாசிப்பதால் வ ரப்பட்ட- “వసు రుద్రాదియజమానస్తుత్యః పవిత్ర కీర్తితః” -என்றசுலோகத்தில் சொன்னசூத்திரத்து வமும் - இதரவர்ணத்தில் அவதரித்தபாகவதாளை நிந்தித்து வரப்பட்டசண்டாளத்துவமும் - தங்களை உயர்ந்த குலமென்று பிரமித்து அத்தால் மேட் டில் ஜலம் நில்லாமல் பள்ளத்தில் தேங்குமா ப்போலே (நீர் புரைவண்ணன் சீர்ச்சடகோபன்) என்கிறபடியே எம்பெருமானுடைய நீர்மையா னகிருபையைக் கிருஷ்ணாவதாரத்தில் பிராம்மண ளின் இழந்தாப்போல் இழக்கவேண்டியதோஷமும்-

పరస్పరనీచభావైః - என்பதில் பரஸ்பரம் நித்திய சூரிகள் நீசபாவத்தை வஹித்து (நீசனேன் நிறை

வொன்றுமிலேன்) என்று ஆழ்வார் அருளிச்செய்
தபடியே ஸ்வாபாவிகநைச்சியத்தை உடைத்தாகி
உயர்ந்தகுலத்தாரைப்போல் நைச்சியம் பாவிக்க
அல்லதுஏறிடவேண்டியதோஷமுமில்லாமையால்
ஸ்ரீவசனபூஷணத்தில் (உத்கிருஷ்டமாகப் பிரமித்
தஜன்மம் பிரம்ச ஸம்பாவனையாலெ - ఠరేచ -
என்கிறபடியே பயஜனகம் - அதுக்கு ஸ்வரூபப்
பிராப்தமான நைச்சியம்பாவிக்கவேணும் - அப
கிருஷ்டமாகப்பிரமித்த உத்கிருஷ்ட ஜன்மத்துக்கு
இரண்டுதோஷமுமில்லை - நைச்சியஜன்மசித்தம்-
ஆகையால் உத்கிருஷ்டஜன்மமே சிரேஷ்டம் -
శ్వసాంప్రకుహేవాల - நிகிருஷ்டஜன்மத்தால்வந்த
தோஷிக்ஷமிப்பது விலக்ஷணஸம்மந்தத்தாலெ -
ஜன்மத்துக்குக் கோதும் அதுக்குப் பரிஹார
மும் பழுதிலாவொழுகலென்கிற பாசுரத்தில் அரு
ளிச்செய்தார் - வேதகப்பொன்போலே இவர்க
ளோட்டைசம்மந்தம்-இவர்கள்பக்கல்ஸாம்யபுத்
தியும் ஆதிக்கியபுத்தியும் நடக்கவேணுமென்றும்)
அருளிச்செய்தார் - தேசிகரும் - వయంతుహరిదా
సానాంపా[illegible]క్షావలంబినః - என்று ஹரிதாஸரு
டைய பாதரக்ஷையைப்பற்றினவனாயிருப்பனென்
றருளிச்செய்தார் - உடையவர்பிள்ளை யுறங்காவில்
லிதாஸர் விஷயமாய் (முதலியாண்டானுக்கு அரு
ளிச்செய்த பத்துவார்த்தை) என்றகிரந்தத்தில் சு

ருக்கந்தெரிவிக்கிறோம் - நாம்லோகத்தை யனுசரித்துக்கொண்டிருப்போம் - இதரவர்ணத்தார் நாமும்நகரமும் நன்கறிய) என்கிறபடியே ஆசாரியன் திருவடிகளை நமக்குத்தாரகமென்று லோகப்பிரசித்தமாயிருப்பார்கள் - நாங் குலகோத்திர - மந்திரம் - ஸ்தானம் ஜபம் - சந்திகளாலெ பேறென்றுபிரமிக்க ஹேதுவுண்டாயிருப்போம் - அவர்கள் சேஷித்துவ - பாரதந்திரியமே ஆத்மாவுக்குத் தாரகமாயெண்ணி அதுவே குலகோத்திரமாயெண்ணி யிருப்பார்கள் - நாம்முன்சொன்னகருடங்களையனுஷ்டித்து கையோய்ந்துவிழுந்தெப்பக்கையரைப்போல் மோக்ஷமடைய ஹேதுவில்லாமல் சம்சாரத்திலெமுழுகியிருப்போம் - அவர்கள் அதைத்தாண்டுகிறத்துக்கு ஆசாரியன் திருவடிகளென்கிற ஓடத்திலேறிதாண்டக்கடவராயிருப்பார்கள்- என்பது முதலானபத்துவார்த்தைகளில அருளிச்செய்தவைகளையே பிள்ளலோகாசாரியரும் அருளிச் செய்தார்.

கேசதாரணம்.

பஞ்சஸம்ஸ்காரமானபிரபன்னவிதவஸ்திரீகள் ஸிரோஜவபனம்பண்ணக்கூடாதென்றும் வ வாரியர்கள்வபனம்பண்ணவேணுமென்றுஞ்சொல்லுகிறார்கள் - முன்னவர்கள்சொல்வதற்குச்சுருதிப்பிரமாணம் - நாராயணஉபநிஷத்தில் - పతింవిశ్వస్యాత్మే శ్వరంశాశ్వతంశివమచ్యుతం - என்பதில் விசுவமென்கிறஉலகத்திலுள்ள ஆத்மாககளுக்குஸ்ரீமந்நாரா

யணன்பதியன்றும் நாயகனென்றுஞ்சொல்லி அவ
ன் சாசுவதனாய் நாசமில்லாதவனாய் மங்களத்தையு
டையவனாயிருக்கிறானென்று சொல்லுகையால்
ஆத்மாக்களுக்குப் பதிஎம்பெருமானென்று நிச்ச
யமாயிற்று. ஆதலால் ஆரணத்தில் - ௬ - வதுகாண்
டத்தில் - మాత్వంబి కేశ గావటిష్ఠజీవపత్నిప్రపతిలో కేవి
రాజపత్ని శిప్రజాగంసుమనస్యమానాం. என்பதில்

பதிஹீனையான ஸ்திரீகள் தலையைச்சிரைக்கக்கூடா
தென்றும் பதியோடுகூடினஸ்திரீயானவள் கேசத்
துடனே எப்படி விளங்குவளோ அப்படியே எம்
பெருமானைப்பதியாகவுடைய பிரபன்னஸ்திரீகள்
வபனஞ்செய்யாமலிருக்கக்கடவர்களென்றுஞ்சுரு
திசொல்லியிருக்கின்றது.

அவ்வர்த்தத்தை - శ్రియఃపతితత్పతిరాహః -
శ్రీగురుదష్టాక్షరీమంత్ర - జపత్పరమానసా - శరణా
గతిసాంజ్ఞా - విధవానైవకారయేత్ - அஷ்டாக்ஷ
ரத்தில் ஆஸக்தியுடைத்தாய் சரணாகதியடைந்த வி
தவஸ்திரீ க்ஷவரகர்மம்பண்ணிக்கொள்ளக்கூடாது
என்றுபகவான் - గరుడసంహితాయాం - పంచసం
స్కారసంయుక్తా - పాతివృత్యాంగతాసతి . తద్యుక్తా
కేశవపనం - కారయేన్నైవశోభనే ||

கருடசம்ஹிதையில் பஞ்சஸம்ஸ்காரமுடைத்தா

ய்பதிவிரதத்தில் பக்தியுடையஸ்திரிகள் க்ஷவரகருமம்பண்ணிக்கொள்ளக்கூடாதென்றும்.

హై రీనసి ॥ విష్ణుభక్తావిశేషజ్ఞా - శంఖచక్రాంకితాయది - విధవాకేశవపనం - నైవకుర్యాత్ ఖగేశ్వర ॥

ஒய்கருடனே விஷ்ணுபக்தையாய் சங்கசக்கராங்கனமுடையவிசேஷக் கியையானவிதவஸ்திரிக்ஷவரகருமம் பண்ணிக்கொள்ளக்கூடாது.

వృద్ధవాసిష్టః - విధవాయాః ప్రపన్నాయాః - వపనంనప్రశస్యతే - జ్ఞానతోజ్ఞానతోవాపి - నైవకుర్యాచ్ఛుముండనం ॥

விருத்தவாஸிஷ்டத்தில் பிரபன்னைகளானவிதவஸ்திரிகளுக்குக்ஷவரகருமம்பிரசஸ்தமன்று கியானத்தினாலும் அக்கியானத்தினாலும் வபனம்பண்ணிக்கொள்ளக்கூடாது.

పద్మసంహితాయాం ॥ విధవాయదినారిస్యాత్ - తైలాదీనపివర్జయేత్ - కేశసంస్కారసధ్యర్థం - వపనంనైవకారయేత్ ॥

பத்மஸம்ஹிதையில் - விதவையானால் தலைமயிரைப்பேணும்பொருட்டு அப்பியஞ்சனமுதலான கருமங்களையும் அப்படியே க்ஷவரகருமங்களையும் வர்ஜிக்கவேணுமென்றும்.

పరాశరః - శంఖచక్రాంకితానారీ - విధవా యది
శంకర - కుర్యాచ్ఛిరోజవపనం - రౌరవంనరకంవ్ర
జేత్ ॥

பராசர்வசனம் - சங்கரனைக் குறித்து பகவான் சொன்னது - ஓய்சங்கரனே - சங்கசக்கராங் கன முடையவிதவஸ்திரி க்ஷவரம்பண்ணிக் கொள்ளுவா ளாகில் ரவுரவநரகத்தை யடைகிறாளென்றும்.

వశిష్టః - వైష్ణవేష్టియుతానారీ - యదికుర్యాచ్చ
ముండనం - లోకాంతరగపిహినావా - రౌరవంనరకం
వ్రజేత్ ॥

வசிஷ்டர் - வைஷ்ணவையானஸ்திரி க்ஷவரம்ப ண்ணிக்கொண்டால் பரமபதத்தை யடையாமல் போறதுமன்றிக்கே ரவுரவநரகத்தை யடைகிறாளென்றும்.

శాండల్యః ॥ ఏకాదశీదినేయద్వత్ - అన్నందుష్టం
తదాభవేత్ - పరస్పరాచ్చవిధవా - వపనంనైవకా
రయేత్ ॥

சாண்டிலியர்வசனம் - ஸ்ரீஏகாதசி தினத்தில் அன்னமெப்படிவர்ஜனமோ அதேபிரகாரம்க்ஷவர மும்வர்ஜனமென்றும்-விதவஸ்திரி அன்னியொன்னி யத்தாலாவது செய்துக்கொள்ளக்கூடாதென்றும்.

వైఖానసాగమే ॥ శంఖః ॥ పతివ్రతాయధానారీ -

విధవా చాభవేత్తదా - వినాశిరోజవపనం - కర్మకృద్ధం సంస్మృతా ॥

வைகானஸ ஆகமத்தில் - சங்கர்ஷண ருஷிவசனம் - யோக்கியமான ஸ்திரி க்ஷவரம்பண்ணிக்கொள்ளாமல் பதிவிரதையைப்போலவே அர்த்தவிதவஸ்திரி ஆகக்கடவள் என்றும்.

స్కాందపురాణే॥ పార్వతీం ప్రతిమీశ్వరః ప్రత్యాహః॥ విధవాయదినారీస్యాత్ - ధారయేత్కేశసంతతిం - పరోపదేశమోహేన - వపనం నైవ కారయేత్ ॥

ஸ்காந்தபுராணத்தில் பார்வதிக்குஞ் சிவனுக்கும் நடந்த பிரசங்கத்தில் வைஷ்ணவஸ்திரி விதவையானாலுமயிரைத் தரிக்கவேணும் - பராருடைய உபதேசமோஹத்தாலே க்ஷவரத்தைச் செய்விக்கக்கூடாதென்றும்.

పురాణాంతరే ॥ పంచసంస్కారసంయుక్తా । యాసతీ విధవాభవేత్ । విష్ణుభక్తాచ సా తన్వీ । వపనం నైవ కారయేత్ ॥

புராணாந்தரத்தில் - பஞ்சஸம்ஸ்கார முடைய பதிவிரதையானஸ்திரி விதவையாய் விஷ்ணுபக்தையாயிருந்தால் ஸ்திரி க்ஷவரம்பண்ணிக் கொள்ளக் கூடாதென்றும்.

పురాణాంతరే । ఆగ్నేయాదిపురాణేషు । వపనం నైవచోదితం । పాంచరాత్రాదిషుశ్రుతౌ । విధవానాం

నతద్వి ధిః || புராணாந்தரத்தில் - ஆக்னேயாதிபுராணங்களில் இதரப்பிராம்மணஸ்திரிகளுக்கு க்ஷவரம் ருஷிகளாலே சொன்னபோதைக்கும் ஒய்சுபமானவளே பாஞ்சராத்திரத்தில் ஸ்ரீவைஷ்ணவஸ்திரீகளுக்கு அந்த க்ஷவரம்விதிக்கவில்லை என்றும்.

புராணாந்தரத்தில் - విధవాయాః ప్రపన్నాయాః కేశానాంఖంఢనంత్యజేత్ - తులసీకాననమివ - క్రీడతిచాహంశౌనకః - பிரபன்னைகளானவிதவஸ்திரீகளுக்குக்ஷவரத்தைதியஜிக்கவேணும். அவர்களுடையசிரசிலிருக்குங் கேசந்துளசி அரண்யம்போலவே பவித்திரமாகும் என்றும் - విధవాయాః ప్రపన్నాయాః - కేశపఙ్క్తిహరిస్వయం - తులసీకాననయివ క్రీడంతిరతిశౌనకః - பிரபன்னைகளுடைய சிரசிலே ஸ்ரீஹரிதுலசீகானனத்தைப்போல் விளையாடுகிறாரென்றும் - சவுனகர் அருளிச்செய்தார்.

மற்றொருபுராணத்தில் - విద్వద్విప్రనృపస్త్రీణాంవపనంనైవకారయేత్ - என்பதில் வித்வான்களான பிரம்மவித்துக்களாய் விப்பிராளாயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவஸ்திரிகளுக்கும் ராஜஸ்திரீகளுக்குஞ் சிரோஜவபனங் கூடாதென்று இப்படி அநேகமுண்டாயிருக்கின்றது - பின்னுஞ் சிவபுரா

பிக்கப்படும். அன்றியில்தேசிகர் பெரியபெருமாள்விஷயமாய் பாதுகாஸஹஸ்ரமென்ற க்ரந்தம் விண்ணப்பஞ் செய்தபோது - பிள்ளைலோகாசாரியர் திருத்தம்பியார் அருளிச்செய்த பதகமலஸஹஸ்திரத்தை தேசிகர்மெச்சி - సూతే

న సూకర సుతశతమత్యంతదుర్భగా కం ఝటితి - కరి
ణీచిరాయసూతేన సకలమహీపాలలాలితం కలభం

பன்றிசீக்கிரத்தில் அனேகங்குட்டிகளை ஈன்றுயானைபன்னிரண்டுவருஷத்துக்கொருகுட்டியையீன்றபோதிலுஞ்சகலமஹீபாலராலே உபலாலிக்கப்படுமென்று தேசிகர் ஸ்தவத்தியம்பண்ணப்படும் அழகியமணவாளநைநாசாரியராலே அருளிச்செய்த ஆசாரியஹ்ருதயமென்றகிரந்தத்தில் சொல்லியிருக்கின்றகிரமத்தில் உத்தரவு சொல்வதற்கு எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம். பண்டிதாள் இதில் சுலோகப்பிழை இலக்கணப்பிழைகளை நினையாமல்ஹம்ஸம்போல் அர்த்தத்தைமாத்திரங்கிரஹிப்பார்கள் - శ్లోకో పీనపూరయేత్ - என்கிறபடியே

கட்சிக்குத்திரவு சொல்லமாட்டாத பாமராள்கோபத்தினாலே பூரிப்பார்கள். உபய வேதஸாரமானஇதில் விசுவாஸமுண்டாய் படித்தவர்களுக்குஆழ்வார்( வேரிமாறாதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே) என்கிறபடியேபெரியபிராட்டியார் அனுக்கிரஹத்தாலேசகலவினைகளும் போய்(நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டீர் மக்களே)என்கிற

படியே நல்செம்பத்துடனேயுங் கொண்டபெண்
உருடனேயுங்கூடி நல்லமக்களைப் பெற்று (வைய
ம்மன்னி வீற்றிருந்து விண்ணுமாளுவர் மண்ணூ
டே)என்கிறபடியே எம்பெருமானைப்போலே
௱௨௰ - சம்மச்சரங்கீர்த்தியுடனே பூமியிலிருந்து
இங்கிருந்தே பரமபதத்தில் சிறுமுறிச் சீட்டுச்
சொல்லும்படி பரமபதத்தையும் ஆளுவர்களெ
ன்றருளிச்செய்த படியேயும் - (கொடுமாகடல்
வையகமாண்டு மதிக்கொடை மன்னவராயடிகூடு
வரோ)என்றுதிருமங்கை மன்னன்அருளிச் செய்த
படியேயும்உபய விபூதியையும் ஆழ்வார்அனுக்கிர
ஹத்தாலே ஆளப்பெறுவர்கள்.

ஜீயர்திருவடிகளேசரணம்.



